கழக வெளியீடு: ௮௦௯

# வள்ளுவர் சொல்லமுதம்

[முதற் புத்தகம்]

ஆசிரியர் :

*வித்துவான், திருக்குறள்மணி,*

**அ. க. நவநீத கிருட்டிணன்**

*ம. தி. தா. இந்துக் கலாசாலை,*

*திருநெல்வேலி.*

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை

வள்ளுவர், ஓர் அறிவூற்று. அவ்வூற்றில் ஊறிச் சுரந்த தேனீர் ஊற்றுக்கால்களே ஏனைய நூல்கள். வள்ளுவர் காட்டிய வழியே வழி; மற்றோர் வகுத்தன, காலத்தாற் படாராது செல்வனவாம். எனவே, வள்ளுவர் ஒருவரே புலவர். இதனானே, 'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்டது' நம் தமிழ்நாடு; தாய்நாடு. நம் தாய்நாடு, ஏனைய சேய்நாட்டுக்கும் இவரை உரிமையாக்கிற்று.

அமிழ்து, நரை திரை மூப்பு பிணி நீக்கி உடற்குச் செம்மைதரும் அரிய மருந்து. வள்ளுவர் அருளிய திருக்குறட் சொல்லமிழ்து, உடற்கன்றி உயிரினது அறியாமைப் பிணிப்பு நீக்கி, அறிவொளி கான்றெழுதரும் காளாமணிவிளக்கு. இதன் பெருமையை அக்காலத்து ஆன்றோரும், 'சிந்தைக்கினிய செவிக்கினிய வாய்க்கினிய, வந்த இருவினைக்கு மாமருந்து' எனப் போற்றுவாராயினர்.

இத்தகைய வள்ளுவர் வாய்மொழிக்கடலின் சொல்லமுதத்தை மொண்டு கொண்டெழுந்து அறிவுவானிலே நிற்கும் வித்துவான், திரு. அ. க. நவநீதகிருட்டிணன் என்னும் மாமேகம், உலகெலாம் பருகப் புத்தமிழ்தமாகப் பொழிந்துளது.

இதற்கு 'வள்ளுவர் சொல்லமுதம்' எனப் பெயரமைத்து, நூலுருவாக்கி முதற் புத்தகமாக என்றுமுள தென்றமிழ் இயலும் நம் நாட்டிடத்தே வெளிக்கொணர்ந்துள்ளோம். அன்பர்கள் வாங்கிக் கற்றுப் போற்றி, வள்ளுவர் சொல்லமுதை நல்லமுதாக்கிப் பயன் பல பெறுவார்களென நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# அணிந்துரை

பொதுமறை அருளிய புலவர் பெருமானாகிய திருவள்ளுவர் உலகறிந்த பெருநாவலர் ஆவர். அவரது புகழ், தமிழகத்தின் சந்து பொந்துகளிலும் மூலை முடுக்குகளிலும் பொங்கிப் பரவிப் பூரணமாய்ப் பெருகிவிட்டது. அவரது இணையற்ற திருக்குறள் நூலுக்குப் பத்து உரைகள் முன்னர்த் தோன்றின. இன்று எண்ணற்ற புத்தம் புதிய உரைகள், தமிழர் சித்தம் களிக்கத் தோன்றிக்கொண்டே இருக்கின்றன. அதனை நோக்குவார் நுண்மாண் நுழை புலத்திற்கு ஏற்பச் சுடர்மணி கொழிக்கும் அறிவுச் சுரங்கமாக விளங்கி வருகிறது. திருக்குறள் சுடர் மணிகளை ஞானநீர் கொண்டு கழுவக் கழுவப் பேரொளியே வீசும். பக்கங்களைத் தீட்டத் தீட்டப் பேரொளியே கூட்டும்.

'நவில்தொறும் நூல்நயம்' என்னும் அவரது மறைமொழிக்குத் தக்க சான்றாய்த் திகழ்வது அவர் அருளிய நூலே. புலவன் தனது வாழ்நாள் முழுதும் ஆய்ந்துகண்ட அரும்பெறல் உண்மைகளை எல்லாம் தொகுத்துக் கருத்தை ஒருவழி நிறுத்தி ஒரே நூலாக ஆக்குவானாயின் அந்நூல் தன்னேரில்லாத பொன்னேடாகவே பொலிவுறும் என்பதில் ஐயமில்லை. அம் முறையில் நம் தமிழ்மொழிக்கண் மூன்று நூல்களே தோன்றின. அவை திருக்குறள், சிலப்பதிகாரம், திருத்தொண்டர்புராணம் என்பன. இம் மூன்றனையும் இயற்றியருளிய புலவர்கள் இணையற்ற பெருமையுடையவர்கள். திருவள்ளுவர் தெய்வப்புலவர் என்று போற்றும் திறம் பெற்றவர். நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம் அருளிய இளங்கோ, சேரமன்னர்; இளமையில் துறவு பூண்ட அடிகளார். சேக்கிழார், சோழப் பேரரசின் முதல் அமைச்சராய்த் திகழ்ந்

தவர். இம்மூவரும் தனித்தனி ஒரு நூலே ஆக்கியருளினர். அந்நூலை அன்றி ஒரு பாடலேனும் வேறு பாடினாரல்லர்.

தமிழின் இணையற்ற பெருநூல்கள் மூன்றனுள்ளும் முதன்மை சான்றது தெய்வப் புலவர் அருளிய திருக்குறளே என்பதை இயம்பவும் வேண்டுமோ? இந்நூலை முறையாகக் கற்கவேண்டும் என்ற பேரார்வம் தமிழரிடையே இன்று பெருகியிருக்கிறது. அக்காரணத்தால் வள்ளுவரை ஒரு சிறிது கற்ற எளியேற்குப் பத்தாண்டுகளாகத் தொடர்ந்து திருக்குறள் விரிவுரையாற்றும் பேறு, நெல்லையில் நெல்லையப்பர் திருக்கோவிலிலும் தருமையருள்பெறு அருணகிரிக் கழக மன்றத்திலும் வாய்த்தது. அதன் பயனாகவே 'வள்ளுவர் சொல்லமுதம்' என்னும் இச்சின்னூல் உருவாயது. வள்ளுவரைப் பல வடிவில் பலர் வாயிலாகக் கண்டு மகிழும் தமிழுலகம் இதனையும் ஏற்றுப்போற்றும் என்னும் உறுதியுடையேன்.

எளியேன்பால் அமைந்த ஒருசிறு எழுத்து வன்மையையும் பழுத்துக் கனியுமாறு செய்ய வேண்டும்; அதன் பயனைத் தமிழர் துய்க்குமாறு செய்யவேண்டும் என்ற பெருவிருப்பால் என்னைப் பலகால் நூல்கள் எழுதுமாறு ஊக்கிவரும் தமிழ்ப் பெருங்காவலராய கழக ஆட்சிப் பொறுப்பாளர் உயர்திரு. வ. சு. பிள்ளையவர்கட்கு என்றும் மாறாத நன்றியுடையேன்.

தமிழ் வெல்க!

அ. க. நவநீதகிருட்டிணன்.

# உள்ளுறை

# வள்ளுவர் சொல்லமுதம்



## க. திருக்குறள் தெள்ளமுதம்

அமிழ்தம் என்பது அழகிய இனிய தமிழ்ச்சொல். அச்சொல்லின் இனிமைக்கு அதன்கண் உள்ள சிறப்பு ழகரமே தக்க சான்று. இயற்கை நலம் கெழுமிய இன்பத் தமிழ்மொழியே இனிமை வளம் கொழிப்பது. தமிழ் என்ற சொல்லுக்கே இனிமை என்ற பொருள் உண்டு. கற்பதற்கும் கேட்பதற்கும் களித்து உரையாடுதற்கும் எளிமையும் இனிமையும் வாய்ந்தது இம்மொழி. அமிழ்தம்போன்று ஆருயிர் தழைக்கச் செய்யும் ஆற்றல் உடையது.

இந்நாள் உலகில் வழங்கும் மொழிகள் மூவாயிரம். அவற்றுள் பழமையும் இலக்கிய வளமையும் பொருந்திய மொழிகள் இரண்டே. அவை நந்தம் செந்தமிழும் அயலதாகிய சீனமுமே ஆகும். இவ் இரண்டனுள்ளும் இனிமை மிக்கது தமிழ்மொழியே. இதனாலேயே பன்மொழி அறிந்த பாவலராகிய பாரதியார்,

> "யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
> இனிதாவது எங்கும் காணோம்"

என்று பாடினார். முன்னைப் பழமொழிக்கும் முன்னைப் பழமொழியாய்ப் பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும்

அப்பெற்றியதாய் இனிமையே உருவாய் இலங்கு கின்றது. எழுத்து, சொல், பொருள் அமைதிகளால் உயர்வுற்றது. பல்வேறு சொல் வளத்தால் தனித் தியங்கும் ஆற்றல் உடையது. குறைவரத் திருந்திய செம்மைகொண்டது. ஆதலின் உயர் தனிச் செம் மொழி என்று போற்றும் ஆற்றல் உடையது.

உயர் தனிச் செம்மொழி ஆகிய நந்தம் செந்தமி ழில் இனிய பொருள்களைக் குறிக்கும் சொற்கள் எல்லாம் தனிச் சிறப்புடையன. குழல், யாழ், எழில், பழம், மழை, எழிலி, அழகு, மழலை, தழை, உழை, முழவு, உழவு, அமிழ்து முதலாய சொற்களை நோக் குங்கள். எல்லாச் சொற்களும் வாயால் சொல்லவே நல்லின்பம் விளைப்பனவாக உள்ளன. தமிழுக்கே உரிய சிறப்பு ழகரம் அச்சொற்கள் அனைத்திலும் ஒலிப்பதைக் காணலாம்.

பாற்கடலைக் கடைந்த நாளில் அமிழ்தம் தோன் றியது என்பர். அது சாவாமைக்குக் காரணமாகும் தேவாமுதம் என்று கூறுவர். அவ்வமுதை உண்ட வானவர் என்றும் அழியாதவாழ்வு பெற்றனர் என்பர். தெய்வப் புலவராகிய திருவள்ளுவர் அறிவுப் பெருங்கடலைக் கடைந்தார். அமிழ்தத் திருக்குறளைக் கண்டார்.

"அறிவுக் கடலைக் கடைந்தவனும்
அமுதம் திறக்குறள் அடைந்தவனும்"

மாலவன் பாற்கடல் அமுதத்தை வானவர்க்கு மட்டுமே வழங்கினன். வள்ளுவர் பெருமானே தாம் கண்ட திருக்குறள் தெள்ளமுதத்தை உலகினர் அனைவர்க் கும் ஊட்டியருளினர்.

திருவள்ளுவருக்குப் பாமாலை சூட்டிய பாவாண ருள் ஒருவராய ஆலங்குடி வங்கனார் என்னும் அருந் தமிழ்ப்புலவர் திருக்குறள் தெள்ளமுதின் தீஞ் சுவையை வியந்து போற்றுகிறார்.

வள்ளுவர் பாட்டின் வளமுரைக்கின் வாய்மடுக்கும்
தெள்ளமுதின் தீஞ்சுவையும் ஒவ்வாதால்—தெள்ளமுதம்
உண்டறிவார் தேவர் உலகடைய உண்ணுமால்
வண்டமிழின் முப்பால் மகிழ்ந்து.

இப்பாட்டில் ஆலங்குடி வங்கனார், வள்ளுவர் வழங்கி அருளிய திருக்குறள் என்னும் தெள்ளமுதின் தீஞ் சுவைக்கு வானவர் உண்ட அமிழ்தின் அருஞ்சுவை யும் ஒவ்வாது என்று உவந்து புகழ்ந்தார். வானமுதம் உண்டவர் அரியாத பெருவாழ்வு அடைதல்போலத் திருக்குறள் தெள்ளமுதம் உண்டவர் உலகில் நல் வாழ்வுபெற்று உய்வர். ஆயிரத்து முந்நூற்று முப் பது அருந்துளிகளே கொண்ட அமுதப் பொற்கிண் ணம் நமது அருமைத் திருக்குறள். அத்தெள்ளமுதத் தீந்துளிகளை உளமாரப் பருகினோர் தமிழ் வளமார்ந்த பெரும்புலவராய்த் திகழ்வர். 'மன்னு தமிழ்ப் புலவராய் மாநிலத்தில் வீற்றிருக்கலாம்' என்பர் நத்தத்தனார் என்னும் நற்றமிழ்ப் புலவர்.

திருக்குறள் தெள்ளமுதம் சிந்தைக்கு இனியது; செவிக்கு இனியது; வாய்க்கு இனியது; வந்த இரு வினைக்கும் மாமருந்தாய் இலகுவது என்று கவுணியனார் கட்டுரைப்பர். பிழை மிகுந்த பாக்களை நோக்கி நோக் கித் தலைக்குத்துநோயால் அலைப்புண்ட தமிழ்ப்புலவ ராய சீத்தலைச்சாத்தனார்க்குத் திருவள்ளுவர் அருளிய திருக்குறள் தெள்ளமுதமே நோய் நீக்கும் மருந்தாய்

அமைந்தது. இதனை அவர் காலத்தில் விளங்கிய மருத்துவராய பெரும்புலவர் தாமோதரனாரே தெரிவிக்கிறார்.

" மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலால்
தலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு"

என்பது அவர் வாக்கு.

இங்ஙனம் இன்னமிழ்தாய் நன்மருந்தாய் விளங்கும் திருக்குறளை, அதற்குப் பின்னெழுந்த நூல்கள் அனைத்தும் எடுத்தாள்வதைச் சிறப்பென்று எண்ணின. உணவுக்கு உறுசுவை தந்து நிற்பது உப்பு அன்றோ! உப்பில்லாப் பண்டம் குப்பையில் அன்றோ கொட்டப்படும்! அது போன்றே, குறள் உப்புக் கலவாத இலக்கிய உணவெல்லாம் அறிஞர் உள்ளம் கொள்ளாத இயல்புடையவாயின. சிறந்த மருந்துகளை ஆய்ந்து அமைக்கும் மருத்துவர், உண்பார்க்குச் சுவையுடன் அம்மருந்துகள் அமையத் தித்திக்கும் அமிழ்தனைய ஒரு பொருளைச் சிறு துளி அளவே அனைத்தினும் கலப்பர். அஃதேபோன்று உளநோய் அகற்றும் மருந்தனைய நூல்கட்கெல்லாம் அருஞ்சுவை தரும் இயல்பினது திருக்குறள் தெள்ளமுதமே.

---

## உ. இறையருளும் நிறைமொழியும்

இறைவன் எங்கும் நிறைந்தவன். பார்க்கும் இடம் எங்கும் நீக்கமற நிறைகின்ற பரம்பொருள். அவன் இல்லாத இடமே இல்லை. உயிருள் உயிராகியும் அணு வுள் அணுவாகியும் ஒளிர்பவன். அவனன்றி ஓரணு வும் அசைவதில்லை. அறக் கடலாகவும் அருட்பெருங் கடலாகவும் அறிவுருவாகவும் திகழ்பவன். விருப்பு வெறுப்பு இல்லாத விமலன். இருவினைகள் சேராத இயல்பினன். தனக்கு உவமை இல்லாத தனிப் பெருமை உடையவன்.

இத்தகைய இறைவன் திருவடி, பிறவிப் பிணிக்கு மருந்தாய் விளங்குவது. அதனை வணங்குதலே அறி வுடையார் செயல். அதுவே கல்விப்பயன் ஆகும். அப்பெருமானது திருவடிகளை இடையறாது சிந்திப்பார் இன்ப உலகில் இனிது வாழ்வர். அவர்கள் எப் போதும் எவ்விடத்தும் இன்னல் எய்தமாட்டார். இறை வன் திருப்புகழை விருப்புடன் ஓதுவார்க்கு இருவினைத் துன்பங்கள் வருவனவல்ல. அவர்கள் நிலைபெற்ற நல்வாழ்வு பெறுவர். பிறவிக்கடலை நீந்திப் பேரின் பக் கரையேறி மகிழ்வர். இருமைப் பயன்களையும் ஒருங்கு நல்கும் இறைவன் தாளை வணங்காத் தலை பாழுந்தலை என்று இறை உண்மையையும் அவன் அருள் வன்மையையும் இனிது விளக்குவார் தெய்வப் புலவர் திருவள்ளுவர்.

இறைவனது திருவருள் வடிவாகப் பொழிவதே மழை. ஆதலின் தமது திருக்குறட் பெருநூலில்

கடவுள் வாழ்த்தை அடுத்து வான் சிறப்பை வலி யுறுத்தினர். 'மழையின்றி மாநிலத்தார்க்கு இல்லை' என்பர் அறிஞர். மழை பொழிவதனாலேயே உலகம் வாழ்கிறது. உயிர்கள் தழைக்கின்றன. ஆதலின் மழையே மாநிலத்தார்க்கு அமிழ்தம் என்று போற் றும் மாண்புடையது. மழைத்துளி வீழாதாயின் பாரில் பசும்புல்லின் தலையையும் பார்த்தல் இயலாது. நெடுங் கடலும் தன் நீர்வளம் குன்றிவிடும். உழவர் நிலத்தை உழுது பயிர் செய்தலை ஒழிவர். பரந்த உலகத்தைப் பசித்துயரம் பற்றிக்கொள்ளும். தெய்வங்கட்கு விழ வும் வழிபாடும் நடவாது ஒழியும். தானமும் தவமும் தாரணியில் நடவா. 'அவனருளாலே அவன் தாள் வணங்கி' என்னும் மணிமொழி எவ்வளவு உண்மை யானது!

'மழையும் தவமிலார் இல்வழி இல்லை' என்பர் நல் லறிஞர். 'நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை' என்பார் தமிழ் மூதாட்டி யார். இறைவன் திருவருளைப் பெறுதற்கென்றே அரிதின் முயன்று பெருந்தவம் கிடப்பார் முனிவர் பெருமக்கள். அவர்களையே நம் தெய்வப்புலவர், நீத் தார் என்ற பெயரால் குறித்தருளினர். முற்றும் துறந்த முனிவர்பெருமை மொழியவொண்ணாது. பாரனைத்தும் பொய்யெனவே பற்றற்று நின்று, பற் றற்ற பரம்பொருளைப் பற்றிய அன்னார் முற்றுணர்ந்த மூதறிஞர் ஆவர். அவர்கள் செயற்கரிய செயல் புரியும் பெரியர். குணமென்னும் குன்றேறி நின்ற குனிர் தவச் செல்வர். செந்தண்மை பூண்ட அந்தணாளர். உரன் என்னும் தோட்டியால் ஓரைந்தும் காத்த உத்தமர்.

திருவருள் கைவரப்பெற்ற துறவியராகிய அற வோர் பெருமை அளப்பரியது. உலகில் பிறந்து இறந்த மக்களை எண்ணுதல் கூடுமோ? அதுபோலவே தான் துறந்தார் பெருமையை அளந்தறிதல் இயலாது.

"துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக்கொண் டற்று."

என்பது வள்ளுவர் வாக்கு.

இத்தகைய பெருமை வாய்ந்த அருந்தவச் செல் வர் திருவாய்ப் பிறக்கும் மொழிகளே நிறைமொழி யெனவும் மறைமொழியெனவும் போற்றும் ஆற்றல் உடையன. நீத்தாரை நிறைமொழி மாந்தர் என்றே வள்ளுவர் போற்றுவார். அவர்கள் அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப்பயன்களைப் பயந்தே விடும் இயல்புடையன அவர் மொழிகள். அவைகளே மந்திரம் என்று முன்னோர் பொன்னேபோல் போற் றிய மொழிகள். இதனைத் தொன்மைத் தமிழ் இலக் கணம் ஆகிய தொல்காப்பியம் நன்கு வலியுறுத்தும்.

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப."

என்று தொல்காப்பியர் சொல்லிப் போந்தார்.

சந்தனப்பொதிகைச் செந்தமிழ் முனிவனாகிய அகத்தியன் அறு முனிவர்களுடன் இந்திரப்பேறு பெறுதற்கு விரைந்தேகும் நகுடனது சிவிகையைத் தோளில் சுமந்து சென்றான். காமவேட்கை மீதூர்ந்த நகுடன், இந்திராணியின்மீது கொண்ட அடங்காக் காதலான், 'சர்ப்ப! சர்ப்ப!' என்று சத்தமிட்டான். நகுடனது அறியாமை மிக்க காம மயக்கினைக் கண்ட

தண்டமிழ் முனிபுங்கவனாகிய அகத்தியன், 'சர்ப்ப மாகக்கடவாய்!' எனக் கோபங்கொண்டு சாபமொழி பகர்ந்தான். காமப் பித்தனாகிய நகுடன் கானகத்து உழலும் பாம்பாகிக் கடுந்துயர் உழந்தான். தமிழ் முனிவனாகிய அகத்தியன் அகத்தெழுந்த கோபமொழி நிறைமொழியன்றோ!

இறையருள்பெற்ற நிறைமொழியாளராகிய ஞான சம்பந்தர் மதுரைத் திருமடத்தில் தங்கியிருந்தகாலைச் சமணர்கள் அங்கே தீக்கொளுவினார். அச்செயலுக்கு மூலகாரணமாய் இருந்தவன் மதுரை மன்னன் ஆகிய கூன்பாண்டியனே என்பதை உணர்ந்த அப்பெரு மான், 'பையவே சென்று பாண்டியற்காகவே' என்று இயம்பியருளினார். அவரது மொழிகள் நிறைமொழிக ளாதலின் திருமடத்தில் பற்றிய தீயின் வெம்மை, தென்னவன் உடம்பில் வெப்புநோயாகப் பரவியது.

சமணருடன் வாதுசெய்யத் திருவுள்ளம்கொண்ட ஞானசம்பந்தர், பாண்டியனது வெப்புநோயை நீக்க முற்பட்டார். ஆலவாய்ப் பெருமான் திருவருளைச் சிந் தித்து, 'மந்திரமாவது நீறு' என்று தொடங்கிச் செந் தமிழ்த் திருப்பதிகம் பாடியருளினார். ஆலவாயான் அருள் கலந்த திருநீற்றை அரசன் உடம்பில் பூசி யருளினார். அவனது வெப்புநோய் அகன்றது. வேந் தனும், 'ஓங்குக!' என்று வாழ்த்தியருளினார். அப் பெருமானது நிறைமொழியின் ஆற்றலால் மன்னனது உடற்கூனும் மாறியதன்றோ!

திருமருகல் என்னும் தலத்தே பாம்பு தீண்டி மாண்ட வணிகன் மீண்டும் உயிர்பெற்று எழுமாறு பாடியருளிய ஞானசம்பந்தர் வாக்கு நிறைமொழியாவ

தன்றோ! அப்பூதியடிகள் மைந்தன் அங்ஙனமே நச்சரவம் தீண்டி நல்லுயிர் நீத்தகாலை நாவுக்கரசர், அவன் உயிர்பெற்று எழுமாறு பாடியருளிய பாக்கள் இறையருள் கலந்த நிறைமொழிகள் அன்றோ!

திருமறைக்காட்டில் வேதத்தால் அடைக்கப் பெற்ற திருக்கோவில் கதவங்கள் திறக்குமாறு திருநாவுக்கரசர் பாடிய பாசுரங்களும், மீண்டும் அவை அடைக்குமாறு திருஞானசம்பந்தர் அருளிய பாக்களும் அருள் கலந்த நிறைமொழிகள் அன்றோ! சுந்தரர் அவிநாசித் திருப்பதியில் முதலை உண்ட பாலனை அழைக்க, முழுமுதற் பெருமானை நினைந்து, 'கரைக்கால் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே' என்று அருளிய திருவாக்கு நிறைமொழியாவதன்றோ!

## ௩. மனையும் மக்களும்

மனை என்னும் சொல் நாம் வாழும் இல்லத்தையும் இல்லிற்குத் தலைவியாகிய இல்லாளையும் குறிப்பதாகும். மனைவி என்பது மனைக்குத் தலைவி என்ற பொருளைத் தரும். மனையை ஆளுபவள் மனையாள் எனப்பட்டாள். மனைவியுடன் கணவன் மனையில் வாழ்ந்து புரியும் அறமே மனையறம் எனப்படும். அதனையே இல்லறம் என்றும் இல்வாழ்க்கை என்றும் குறிப்பர். 'இல்லறம் அல்லது நல்லறம் அன்று' என்பது ஔவையாரின் அமுதமொழி.

மக்கள் வாழ்வு நெறிகளை நால்வகையாகப் பகுப்பர் நல்லோர். அவை மாணவநெறி, இல்லறநெறி, மனைவியுடன் தவம்புரியும் நெறி, முற்றும் துறந்த துறவு நெறி என்று கூறப்பெறும். இவற்றினையே வடநூலார், பிரமசரியம், கிரகத்தம், வானப்பிரத்தம், சந்நியாசம் எனக் குறிப்பர். இந்நால்வகை வாழ்வு நெறியுள் தலைமைசான்றது இல்லறமே. அதுவே நல்லறம் என்று போற்றுவர் ஆன்றோர்.

> " அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
> பிறன்பழிப்ப தில்லாயின் நன்று."

என்று சொல்லுவார் வள்ளுவர். இல்லறம் துறவறம் என்னும் இருவகை அறத்துள்ளும் அறம் என்று சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது இல்லறமே என்பது அப் பொய்யில் புலவர் கருத்து.

இல்லறத்தை ஆண்மகனோ பெண்மகளோ தனித்து நடத்துதல் சாலாது. பருவம், உருவம், அறிவு,

திரு, குணம் ஆகியவற்றால் ஒப்புடைய ஒருவனும் ஒருத்தியும் கருத்து ஒருமித்து வாழ்வதே இல்வாழ்க்கை எனப்படும். 'காதல் இருவர் கருத்து ஒருமித்து ஆதரவு பட்டதே இன்பவாழ்வு,' என்பர் தமிழ்ச் செல்வியார். 'காதல் மனையாளும் காதலனும் மாறின்றித் தீதில் ஒரு கருமம் செய்தல் வேண்டும்,' என்பர் சிவப்பிரகாசர். நம் கண்கள் இரண்டும் ஒன்றையே நோக்கும். ஒன்று ஒரு பொருளையும் மற்றொன்று இன்னொரு பொருளையும் நோக்குவது இல்லை. அது போலவே மனையறம் பூண்ட மக்கள் இருவரும் ஒன்று பட்ட உள்ளத்தராய் இல்லறத்தை இனிது நடத்த வேண்டும் என்பர்.

வண்டியில் பூட்டிய காளைகள் இரண்டும் ஒரு நெறியில் சென்றாலன்றி, வண்டி குறித்த இடத்தைச் சென்று சேராது. அதுபோலவே இல்லறம் என்னும் வான்சகடத்தில் பூட்டிய காளைகளாகிய கணவனும் மனைவியும் கருத்தால் ஒன்றுபட்டுச் சென்றாலன்றி அவர் மேற்கொண்ட அறம் நடவாது; வீடுபேறாகிய பயன் விளையாது. இக் கருத்தை முனைப்பாடியார் என்னும் தமிழ்ப்புலவர் தமது அறநெறிச்சாரம் என்னும் அரிய நீதி நூலுள்,

"மருவிய காதல் மனையாளும் தானும்
இருவரும் பூண்டுய்ப்பின் அல்லால்—ஒருவரால்
இல்வாழ்க்கை என்னும் இயல்புடைய வான்சகடம்
செல்லாது தெற்றிற்று நின்று."

என்ற பாட்டால் இனிது விளக்கினார்.

காக்கைக்குக் கண்கள் இரண்டாயினும் ஒளியைத் தரும் கருவிழி ஒன்றே. எப்பக்கம் நோக்கவேண்டுமோ

அப்பக்கமாகக் கருவிழியைச் சாய்த்தே காக்கை ஒரு பொருளை நோக்கும் இயல்புடையது. அதுபோலத் தலைவன் தலைவியாகிய இருவர்க்கும் உடம்பு இரண்டாயினும் உயிர் ஒன்றே. வாழ்வில் வரும் இன்பதுன்பங்கள் எல்லாம் அத் தலைவற்கும் தலைவிக்கும் ஒன்று போலவே வரும் என்று மாணிக்கவாசகர், காதலர் வாழ்வைச் சித்திரிப்பார்.

> "காகத்(து) இருகண்ணிற்(கு) ஒன்றே
> மணிகலந்(து) ஆங்கிருவர்
> ஆகத்துள் ஓருயிர் கண்டனம்
> யாம்இன்றி யாவையுமாம்
> ஏகத்(து) ஒருவன் இரும்பொழில்
> அம்பல வன்மலையில்
> தோகைக்கும் தோன்றற்கும் ஒன்றாய்
> வரும்இன்பத் துன்பங்களே."

என்பது அப்பெருமானது திருக்கோவைப் பாடல்.

உள்ளம் கலந்த காதலர் அன்புநலம் கனிய நடத்தும் இல்லற வாழ்வில் நல்லறங்களை ஆற்றுதற்கு ஏற்ற துணையாகும் இல்லாளை, வள்ளுவர் வாழ்க்கைத் துணை என்ற பெயரால் வழங்கினார். அவள்பால் அமையவேண்டிய பண்புகளை வாழ்க்கைத் துணைநலம் என்ற அதிகாரத்தால் இனிது விளக்கியருளினார். இல்வாழ்க்கைக்கு ஏற்ற துணையாகும் பெண்ணிற்கு மனையறத்திற்குத் தக்க மாண்புகள் வேண்டும். கணவன் வருவாய்க்குத்தக வாழத்தெரியவேண்டும். துறந்தார்ப் பேணலும், விருந்து போற்றலும், வறியார்க்கு இரங்கலும், உறவினர்க்கு உதவலும், மன்னுயிர்க்கு அன்பு செய்தலும் ஆகிய பண்புகள் அமையவேண்டும். வாழ்வுக்கு வேண்டும் பொருள்களை அறிந்து கடைப்பிடித்

தல், உணவு சமைக்கும் திறன், ஒப்புரவு செய்தல் முதலாய நற்செயல்கள் அமையவேண்டும். இத்தகைய மாண்புகள் உடையாளே வாழ்க்கைத்துணை என்று வழங்குதற்கு உரியாள். அல்லாதவள் வாழ்க்கைப் பகையே ஆவாள்.

மனையறத்திற்குத் தக்க நற்குண நற்செய்கைகள் ஒருவன் இல்லாளிடத்து இல்லையாயின் அவ் இல் வாழ்க்கை, செல்வத்தால் எத்துணைச் செழிப்புடைய தாயினும் சிறப்புடையதன்று. இல்லாள், தனக்குரிய மாண்புடையவளாக விளங்கினால் ஒருவற்கு இல்லாதது எதுவுமில்லை. அவன் எல்லாம் நிறைந்தவன்.

> " இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
> இல்லவள் மாணாக் கடை."

என்று கேட்பார் திருவள்ளுவர். இதனையே தமிழ் மூதாட்டியாரும், 'இல்லாள் அகத்திருக்க இல்லாதது ஒன்றில்லை' என்று வலியுறுத்துவார்.

சிறந்த மனைவியாவாள் யாவள்? வள்ளுவர் இதற்கு வரையறுத்த இலக்கணத்தை ஒரு குறட் பாவிலேயே வகுத்தருளுகின்றார்.

> " தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
> சொற்காத்துச் சோர்விலாள் பெண்."

என்பது அவரது உறுதிமொழி. பெண்ணாவாள் கற்பி னின்றும் பிறழாமல் தன்னைக் காத்துக்கொள்ள வேண்டும். தன் கணவனை உண்டி முதலியவற்றால் நன்றாகப் பேணவேண்டும். தன்பாலும் கணவனிடத் தும் நன்மை அமைந்த புகழ் நீங்காமல் போற்றவேண் டும். மனையறத்திற்குத் தக்க மாண்புகளினும் மறதி

யில்லாதவளாக இருத்தல் வேண்டும். இச்செயல்களில் என்றும் மாருத உறுதியுடையாளே சிறந்த மனைவி ஆவாள் என்று பெண்ணிலக்கணம் பேசினுர்.

மகளிரிடத்துக் கற்பு என்னும் கலங்காத திண்மைக்குணம் அமையவேண்டும். கற்புடைய மகளிர் கடவுள்தன்மை வாய்ந்தவர். அத்தகைய மகளிரை மனைவியராகப்பெற்ற கணவர்க்கு இல்லாளே பெருஞ் செல்வம் என்பர் வள்ளுவர். கற்புடைய மகளிர், தம் கணவரையன்றிப் பிறதெய்வங்களைக் கனவினும் வணங்கார். கணவர் அடிவருடிப் பின் தூங்கி முன் னெழும் பேதையர்க்குத் தெய்வமும் ஏவல் கேட்கும். மாதர் கற்புடை மங்கையர்க்கென்றே மாதம் ஒரு மழை பொழிதல் உண்டு என்பர் உயர்ந்தோர். கற்பரசியாகிய கண்ணகி கடவுளெனக் கோவில் எடுத்து வழிபடும் பெருமை கொண்டாள் அன்றே!

மாதரைக் கணவர் சிறையால் காப்பது ஏலாத செயல். அவர் தம்மை நிறையால் காக்கும் காப்பே தலையாயது என்பர். அன்னுர் கற்பினை உயிரினும் சிறந்ததாகக் கருதிக் காத்தல் வேண்டும்.

"உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று."

என்று தொல்காப்பியம் சொல்லும். மகளிர்க்கு அமையவேண்டிய நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நாற்பண்புகளுள் நாணம் உயிரினும் சிறந்தது என்பர் தொல்காப்பியர். அந்நாணத்தினும் கற்பு மாணுடையது என்று வற்புறுத்துவர். இக் கற்பினுல் புகழைப் பொற்புற நாட்ட விரும்பிய நங்கையை மனைவியாகப் பெற்றவர்க்குத் தம்மைப் பழித்துரைக்

கும் பகைவர்முன்னும் ஏறுபோல் பீடு நடை உள தாகும். அன்னவளே நன்மனைக்கு விளக்கம் தரும் நங்கையாவள். மனையாளது மாட்சி, ஒருவற்கு மங் கலம் என்றே உரைத்தருளுவார் வள்ளுவர்.

மனையறப் பெருவாழ்வின் அணிகலனுய்த் திகழ் வது நன்மக்கட் பேறு ஆகும்.

"மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலன் நன்மக்கட் பேறு."

என்பது வள்ளுவர் சொல்லமுதம். 'மனைக்கு விளக்கம் அளிப்பவர் மங்கையரே; அவர்க்கு விளக்கம் தருபவர் தகைசால் புதல்வரே' என்று நான்மணிக்கடிகை நவிலும்.

"கடவுட் கற்பொடு குடிக்கு விளக்காகிய
புதல்வர்ப் பயந்த புகழ்மிகு சிறப்பின்."

என்பது அகப்பாடல்.

அன்பினுக் காகவே வாழ்பவரார்?—அன்பில்
ஆருயிர் போக்கத் துணிபவரார்?
இன்ப உரைகள் தருபவரார்?—வீட்டை
இன்னகை யால்ஒளி செய்பவரார்?

எல்லாம் பெண்கள் அன்றோ! அவர்தம் பங்கயக் கைகளின் நலத்தை நோக்கியன்றோ பாரில் அறங்கள் வளர்கின்றன. பிச்சை கேட்பவனும், 'அம்மா! பிச்சை' என்றுதானே கேட்கின்றான்! ஆதலின் இவ் வுலகில்,

"மங்கைய ராகப் பிறப்பதற்கே—நல்ல
மாதவம் செய்திட வேண்டுமம்மா."

என்று மகளிர் பெருமைகளைக் கவிமணி விளக்குவார். இல்லறத்தே புகுந்த நல்லார்க்கு விளக்கம் தரு

பவர் நன்மக்களே. பிள்ளை இல்லாத வீடு காடென்பர் நல்லறிஞர். பிள்ளைச் செல்வமே பெருஞ்செல்வம் என்பது வள்ளுவர் கருத்து. 'தம்பொருள் என்ப தம் மக்கள்,' என்றே கூறுவார். ஒருவன் பெறும் பேறு களுள் நன்மக்களைப் பெறுதல் அல்லது பிற பேறு களை யாம் மதிப்பதில்லை என்று உறுதி தோன்ற உரைத்தருளுவார்.

> "பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
> மக்கட்பேறு அல்ல பிற."

என்பது வள்ளுவர் சொல்லமுதம்.

பிறரால் பழிக்கப்படாத பண்புடைய மக்களை ஒருவன் பெற்றால் அவனை எழுபிறப்பும் தீயன தீண்டா வாம். அம்மக்களது மெய்யைத் தீண்டுதல், பெற் றோர்க்கு இன்பம் தரும். அவரது மழலை மொழிகளைக் கேட்டல், செவிக்கு இன்பம் விளைக்கும். தம் மக்க ளுடைய மழலைச்சொல்லைக் கேளாத பெற்றோரே குழ லிசையும் யாழிசையும் இனியன என்று இயம்புவர்.

> "பொருளறி வாரா வாயினும் தந்தையர்க்கு
> அருள்வந் தனவால் புதல்வர்தம் மழலை."

என்பது புறப்பாடல். தம் மக்கள் இளங்கையால் அளாவப்பட்ட சோறு அமிழ்தினைக் காட்டிலும் இனிய சுவை உடையது.

> "அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
> சிறுகை அளாவிய கூழ்."

என்பது வள்ளுவர் சொல்லமுதம்.

பாண்டியன் அறிவுடைநம்பி என்னும் அரசன் இன்பத்துறையில் எளியனாயிருந்தான். பிசிராந்தை யார் என்னும் பெருந்தமிழ்ப் புலவரால் அவன் நெறிப்

படுத்தப்பெற்றான். பல்லாண்டு மக்கட்பேறு இன்றி வருந்தி மயங்கினான். பின்னர் அதனைப் பெற்றுப் பேருவகை உற்றான். அவன், தன் பெயருக்கேற்ப நல்லறிவு நிறைந்த நம்பியராய்த் திகழ்ந்தானாதலின், தான் பெற்ற இன்பத்தைப் பிறர்க்கும் காட்ட எண்ணினான். தனது இளஞ்சிறார்கள் செய்யும் இன்பச் சிறு தொழில்களைக் கண்டு மகிழ்ந்தான். அச் செல்வச் சிறுவர்கள் தம்முடைய சிறுகை நீட்டிக் குறுகுறு நடந்துவந்து, உண்ணும் உணவில் தம் இரு கைகளையும் இட்டும் தோண்டியும் கவ்வியும் துழாவியும், தம் உடலெங்கும் சிதறியும் இன்ப விளையாட்டு ஆடுதலைக் கண்டு அகமகிழ்ந்தான். அவர்கள் சிதறிய உணவை உண்ணுங்கால் உண்டாகும் இன்பம் பெரிதாதலை அறிந்தான். அவர்கள் மிழற்றும் மழலைச்சொல்லும், செய்யும் செயலும் கண்ணுக்கும் செவிக்கும் உடலுக்கும் இன்பம் ஊட்டி அறிவை மயக்குதலின் உயிர் வாழ்வின் பயன் இதுவே என உயிர் அமைந்து போதலை உணர்ந்தான். இத்தகைய நலம் சான்ற மக்களைப் பெறுதார்க்கு உயிர் வாழ்வால் முடிக்கக் கூடிய பொருளே இல்லை என்று அறவுரை பகர்ந்தான். அவனது பொன்மொழியாக அமைந்த பாடலைக் காணுக.

“படைப்புப் பலபடைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம்வாழு நாளே.”

மக்கட் பேற்றின் மாண்பினை விளக்கப்போந்த புகழேந்தியாரும்,

“ பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்(று)
என்னுடைய ரேனும் உடையரோ—இன்னடிசில்
புக்களையும் தாமரைக்கைப் பூநாறும் செய்யவாய்
மக்களை இங் கில்லா தவர்.”

என்று பாடுவார். மக்களைப் பெருதவர், மாநிலத்தில் மற்றைய எல்லாம் பெற்றிருப்பினும் பெற்றவராகார் என்று பேசுவர். கலையின் துறை அனைத்தும் தோய்ந் தாலும் மக்களின் பால்வாய்ச் சிறு குதலை கேளாச் செவி என்ன பயனுடைத்தாம்? என்று கேட்பார் அப்புலவர்.

தந்தை, தன் மக்களைக் கல்வி அறிவால் சிறந் தவர் ஆக்குதல் வேண்டும். கற்றவர் நிறைந்த அவைக் கண் தலைவராய் வீற்றிருக்கும் தகுதி உடையராக்க வேண்டும். அதுவே தந்தை மக்கட்குச் செய்யும் நன்மையாகும் என்பர் வள்ளுவர்.

“ எச்சம் எனஒருவன் மக்கட்குச் செய்வன
விச்சைமற் றல்ல பிற.”

என்றார் பிறரும். தந்தை, தன்னைக்காட்டிலும் மக்களை மிக்க அறிவினராக்குதல்வேண்டும். அச்செயல், தனக் கும் பிறர்க்கும் பேரின்பம் விளைப்பதாகும் என்று கூறுவர். அறிவால் நிறைந்தவராக ஆக்கினல் மட்டும் போதாது. நற்குணங்களால் நிறைந்த சான்றோர் ஆக்குதல் வேண்டும். அவர்களது சான்றாண்மையைக் கண்டு, அறிவுடையார் போற்றவேண்டும். அப் புகழ் மொழிகளைக்கேட்டால் அம்மக்களைப் பெற்ற தாயர், ஈன்ற பொழுதினும் பெரிதுவப்பர் என்பார் வள்ளுவர்.

"ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்."

என்பது அவர் சொல்லமுதம்.

பொன்முடியார் என்ற பெண் புலவர், பலர் ஆற்றவேண்டிய கடமைகளை ஒரு பாட்டில் குறிப்பிட்டார்.

"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே."

என்று கூறி, மக்களைச் சான்றோர் ஆக்கும் பொறுப்பினைத் தந்தைக்குச் சுமத்தினர். இங்ஙனம் அறிவாலும் குணத்தாலும் பெரியராக்கிய தந்தைக்கு, மக்களும் ஆற்றும் உதவி ஒன்று உண்டு. இத்தகை சிறந்த மக்களைப் பெறுதற்கு இவரது தந்தையர் என்ன தவம் இயற்றினரோ? என்று வியந்து போற்றும் புகழ்ச்சொல்லை விளைக்க வேண்டும். இத்தகைய நன்மக்களே, பெற்றோர்க்கு விளக்கம் தரும் பெற்றியர் ஆவர்.

---

## ௫. கல்வியும் கேள்வியும்

மக்களை மாக்களினின்றும் பிரித்துக் காட்டுவது அவர் பெற்ற கல்வியறிவே. பல்வேறு நூல்களைக் கற்றலால் பெற்றிடும் அறிவே கல்வியாகும். கற்றறிந்த நல்லார் சொல்லக் கேட்டலால் பெற்றிடும் அறிவு கேள்வியாகும். பலகால் பழகிய பழக்க முதிர்ச்சியின் விளைவாலாகிய அறிவு அனுபவமாகும். இங்ஙனம் அறிவை முக்கூறு படுத்தலாம்.

முதற்கண் கல்வியறிவை நோக்குவோம். கல் என்ற சொல், தோண்டு என்ற பொருளைத் தருவது. உள்ளத்தில் ஆழ்ந்த அறியாமையைத் தோண்டி அகற்றி, அறிவைக் கொளுத்துதல் வேண்டும். இயற்கையான அறிவு நம் இதயத்தில் ஆழ்ந்து கிடக்கிறது. மேலே அறியாமை என்னும் மண் மூடியுள்ளது. அவ் அறியாமை மண்ணை அகழ்ந்து, அறிவை விளங்குமாறு செய்வதே கல்வி என்பது பொருந்தும்.

இக் கல்வி அறிவைப் பெறுவது எங்ஙனம்? தக்க நல்லாசிரியனை நாடி, அவன்பால் " உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும் பிற்றைநிலை முனியாது கற்றல் வேண்டும்." குலத்தாலும் நலத்தாலும் சிறந்த ஆசிரியனைக் கொள்ளவேண்டும். அவன் கலைபயில் தெளிவும் கட்டுரை வன்மையும் உடையவனாக விளங்க வேண்டும்; பொறுமையும் பெருமையும் நேர்மையும் சீர்மையும் நிறைந்தவனாக இருக்க வேண்டும். உலகியல் அறிவும் உடையவனாக ஒளிர

வேண்டும். இத்தகைய நல்லாசிரியனுக்குப் பணிந்து கல்வியைப் பயிலுதல் வேண்டும்.

"உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்
கடையரே கல்லா தவர்."

இங்ஙனம் தெய்வப் புலவர், கல்வி பயிலும் முறைமையை வரைவார். செல்வர் முன்பு பணிந்து இரந்து நிற்கும் ஏழையாளரைப் போல, ஆசிரியன்பால் மாணவன் பணிந்து நின்று பாடம்கேட்டல் வேண்டும். அவ்வாறு கற்றவனே கலை வல்ல தலைவனாவான். அங்ஙனம் கல்லாதவர் எல்லாரும் கடையர் என்பது வள்ளுவர் கருத்து.

மாணவன் கற்பனவற்றைக் கசடறக் கற்றல் வேண்டும். ஐயம் திரிபுகளாகிய குற்றங்கள் அகலக் கற்கும் கல்வியே பயனுடையதாகும். ஆதலின், "கற்க கசடறக் கற்பவை" என்பார். தெளிவுறக் கற்ற கல்வியே உளத்திற்குத் தீஞ்சுவை பயக்கும். உலகில் எண்ணிறந்த நூல்கள் உள்ளன. பரந்த கடலைப் போன்று விரிந்து நிறைந்துள்ளன. அத்தனையும் கற்றறிதல் எத்தகையார்க்கும் ஏலாத செயலே. ஆதலின் வள்ளுவர், கற்பவை என்ற சொல்லால் நூல்களைப் பாகுபாடு செய்கின்றார். கற்றற்குரிய நூல்களையே கற்றல் வேண்டும் என்பதை வற்புறுத்துகிறார். அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய உறுதிப் பொருள்களை உணர்த்தும் நூல்களையே ஓதியுணர்தல் வேண்டும்.

அலகுசால் கற்பின் அறிவுநூல் கல்லா(து)
உலகநூல் ஓதுவ தெல்லாம் — கலகல
கூஉம் துணையல்லால் கொண்டு தடுமாற்றம்
போஒம் துணையறிவார் இல்.

என்று நாலடியார் நவிலும். உறுதிப் பொருள்களை அறிவுறுத்தும் உண்மையான நூல்களையே கற்றல் வேண்டும். பிற உலக ஞானத்தைப் பெருக்கும் நூல்களை ஓதுவதெல்லாம் மறுமை இன்பம் பெறு தற்கு உறுதுணை புரிவனவல்ல. பிறவிப் பிணியாகிய தடுமாற்றத்தைப் பெயர்த்தெறியும் பெற்றி அவ் உலக நூல்களுக்கு இல்லை.

கல்வியோ கரையற்ற கடல் போன்றது. அதனைக் கற்பவராய மக்கள் வாழ்நாளோ மிக்க குறைவு. அங்ஙனம் குறைந்த வாழ்நாளுள்ளும் பல் வேறு பிணிகள் வந்து பற்றிக் கொள்கின்றன. ஆதலின், ஆராய்ந்து அமைவுடைய நூல்களையே ஆன்றோர் கற்பர். இம்முறையில் கற்றவரையே மற்றவர் மதிப்பர். எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும் கல்விச் சிறப்புடையாரையே எவரும் வருக வென்று ஏற்றுப் போற்றுவர்.

"கற்றாரை யான் வேண்டேன், கற்பனவும் இனி அமையும்" என்று, சிலர் ஒருசில நூல்களைக் கற்றவளவில் அமைதியுற்று விடுகின்றனர். இறக்கும் வரைக்கும் கற்றாலுங்கூட முற்ற உணர்தல் முடியாது. இதனாலேயே பேரறிஞர்கள் என்றும் மாணவராக இருக்க விழைந்தனர். இடையறாது, ஓய்ந்த வேளை யெல்லாம் ஆய்ந்து கற்றல் வேண்டும் என்பதே வள்ளுவர் கருத்து. ஆதலின்,

> "யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
> சாந்துணையும் கல்லாத வாறு"

என்று சொல்லியருளினார். ஒருவன் எத்தனை நூல் களைக் கற்கிறானோ, அத்துணை அறிவு வளர்ச்சியடை

வான். மணலில் தோண்டும் ஆழத்தின் அளவாகவே தண்ணீர் ஊறுவதைக் கண்ணாரக் காண்கிறோம். அதுபோலவே கற்ற அளவே கலைநலம் பெருகும் என்பது தெளிவு.

இவ்வாறு கற்றுணர்ந்த கல்வி அறிவே என்றும் அழியாத விழுச்செல்வம். மற்றைய பொன்னும் பொருளும் மாடும் மனையும் ஆகிய செல்வங்கள் அழிந்து போகும் நிலையாமை உடையன. ஒரு பிறப்பில் கற்றுப் பெற்ற கல்வி, எழு பிறப்பும் தொடர்ந்து வந்து இன்பத்தை ஊட்டும். இம்மை இன்பம் நம்மை அடையுமாறு செய்வது நல்ல கல்வியே. மாணவர்க்கோ, மனத்தோடு கேட்பார்க்கோ சொற்கொடை புரிவதால் வருவதொரு கேடும் இல்லை. மன்ற உலகத்து மன்னிய புகழை நண்ணுமாறு பண்ணும். மம்மர் அறுக்கும் மருந்தாக விளங்கும். இத்தகைய "கல்வி அழகே அழகு" என்று கற்றறிந்தார் போற்றுவர்.

"கற்றல் கேட்டல் உடையார் பெரியார்" என்று பாடுவார் ஞானசம்பந்தர். "கற்றலில் கேட்டலே நன்று" என்பது பழமொழி. ஒருவன் பல நூல்களைக் கற்றால் மட்டும் போதாது. கற்றுணர்ந்த நல்லார் சொல்லைக் கேட்டல் வேண்டும். அங்ஙனம் கேட்கும் காலையில்தான் கற்றகல்வி, கருத்து விளக்கம் பெறும். ஐயம் திரிபுகள் மெய்யாகவே அகலும். பலகால் கற்றுணரும் கருத்தொன்றைத் தக்கார் வாயிலாக ஒருகால் கேட்டதனையானே உள்ளத்தில் பதித்துக் கொள்ளலாம். பல்லாண்டு முயன்று பயின்று உணரும் அரிய உண்மைகளை எல்லாம்

சிறிய கால அளவுக்குள் சிறந்தார்வாய்க் கேட்டலால் எளிதில் தெரிந்து மகிழலாம். இதனாலேயே தெய்வப் புலவராய திருவள்ளுவர்,

" செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை "

என்று இயம்பியருளினர்.

கேள்வியால் பெறும் அறிவைச் செவிச் செல்வம் என்று போற்றினர் நம் புலவர். அதுவே தலையாய செல்வம் என்றும் குறித்தார். இதனைச் செவி உணவு என்றும் கூறினர். செவியுணவாய கேள்வி அறிவைப் பெற்றவர், அவியுணவைக் கொள்ளும் ஆன்றோராகிய தேவரோடு ஒப்பர் என்று உரைத் தருளினர். தவலரும் தொல் கேள்வித் தன்மை உடையார், தம்முட் கூடி உரையாடி மகிழும் இன்பம் உம்பர் உலகினும் காண இயலாது என்று சொல்லும் நாலடியார். சொல்லின் செல்வராய நல்லார் ஒருவர், தம் நாவன்மை சிறக்கச் செந்தேன் ஒழுகக் கேட்பவர் சிந்தை குளிரச் சீரிய பேருரை வழங்குவாராயின், மக்கள் மதுவுண்ட வண்டெனா மயங்கி இருத்தலைக் காண்கின்றோம் அன்றோ! அத்தகைய கேள்வி என்னும் செவிக்குணவு இல்லாத போழ்துதான் சிறிது வயிற்றுக்கு உணவு வழங்குதல் வேண்டும் என்பர் வள்ளுவர்.

இத்தகைய கேள்வி அறிவு, கல்வி அறிவைத் தெளிவு படுத்திக் கலைநலத்தை வளமுறுத்தும் வன்மை உடையது. பணிவும் இன்சொல்லும் கனியும் உயர்பண்பை நனிவளர்ப்பது. வாழ்வில் தளர்ச்சி வந்தபோழ்து, அதனை அகற்றி உள்ளக் கிளர்ச்சி

யினை ஊட்டவல்லது. வழுக்குடைய நிலத்தில் ஊன்று கோல் உதவுமாறுபோல, உறுபயன் விளைக்கும் பெருநலம் உடையது அக் கேள்வி. ஆதலின் "கற்றிலன் ஆயினும் கேட்க" என்றும், "எனைத்தானும் நல்லவை கேட்க" என்றும் வள்ளுவர் வற்புறுத்துவாராயினர். இத்துணைக் கூறியும் அறியாது வாய்ச்சுவை ஒன்றே கண்டு உண்டு உழலும் மக்களை மாக்கள் என்று பழித்துரைத்தார் நம் புலவர் பெருமான். அவர்கள் இருந்தாலென்ன இறந்தாலென்ன என்று கடிந்து மொழிந்தார்.

> "செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
> அவியினும் வாழினும் என்."

என்பது வள்ளுவர் வாய்மொழி.

இங்ஙனம் கல்வி கேள்வி அறிவுகளைப் பெற்றவரே உலகத்தோடு பொருந்த ஒழுகுவர். உயர்ந்தோரைப் பின்பற்றி ஒழுகத் தெரியாத மக்கள் எவ்வளவு கல்வியைக் கற்றும் எள்ளளவும் பயனில்லை. "பல கற்றும் அறிவிலாதார்" என்றே பழிக்கப் படுவர். "ஊருடன் கூடி வாழ்" என்று சுருங்கச் சொல்லி விளங்க வைத்தார் தமிழ்மூதாட்டியார். "ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்" என்றும் கூறினர். ஊருடன் கூடி, உலகுடன் ஒத்து வாழக் கல்வியும் கேள்வியும் உற்ற துணைக்கருவிகளாகும்.

## ரு. அன்பும் அறமும்

அன்பு, அனைவர்க்கும் அமையவேண்டிய உயர்ந்த பண்பு. மக்கள் வாழ்வுக்கு அடிப்படையான பண்பும் அன்பே. இவ் அன்பென்னும் அடிப்படையின் மேலேதான் அறமாளிகை நிறுவப்பட வேண்டும். ஆதலின், மக்கள் அறவாழ்வை வகுத்துச் சொல்லத்தொடங்கிய வள்ளுவர் பெருமான் முதலில் அன்பையே மொழிந்தருளினர்.

> " அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
> பண்பும் பயனும் அது"

என்பது தெய்வப் புலவர் திருவாக்கு. இல்லற வாழ்வுக்கு அன்பு பண்பாக அமையவேண்டும்; அறம் பயனாக அமையவேண்டும். மனைவியும் மக்களும் முதலாய தொடர்புடையாரிடத்துக் கொள்ளும் காதலே அன்பு என்பர் பரிமேலழகர்.

இவ் அன்பை அறிவது எங்ஙனம்? அன்பர்கள் துன்புறுங்காலத்து, அவர்பால் அன்புசெய்த நண்பர்தம் கண்ணில் சிந்தும் சிறுகண்ணீரோ அவரது உள்ளன்பைப் பலரும் அறிய வெளிப்படுத்தும். ஆதலின் அன்பை அடைத்துவைக்கும் தாழ் உண்டோ? என்று கேட்பார் நம் முதற் பாவலர். அன்பு நெறியில் செல்லும் உடம்பையே உயிர் நின்ற உடம்பு என்னலாம். அன்பிலார்க்கு உள்ள உடம்பு எலும்புகளைத் தோலால் போர்த்துவைத்த வெற்றுடம்பே. உள்ளத்தில் அன்பு இல்லாமல் வாழும் உயிர்வாழ்க்கை, பாலை நிலத்தில் பட்ட மரம் தளிர்த்

தாற் போலும். எலும்பு இல்லாத உடம்பையுடைய புழுவைக் கதிரவன் வெப்பம் காய்ந்து வருத்துவது போல, அன்பு இல்லாத உயிரை அறக்கடவுள் வருத்தும். இம்மையிலும் மறுமையிலும் இன்ப வாழ்க்கைக்கு அடிகோலுவது அன்பே. உற்ற இடத்து உயிர் வழங்கும் உத்தம நட்பாளரைப் பெறுதற்கும் இவ் அன்பே உறுதுணையாக அமையும்.

அன்பிலாதவர் ஒன்றனும் பிறர்க்கு உதவ மாட்டார். எல்லாப் பொருளையும் தமக்கே உரிமையாகக் கொண்டு வாழ்வர். அன்புடையார் அனைத்தையும் பிறர்க்கே உரிமையாக்கிப் பெருமையுடன் வாழ்வர். அன்பே உருவாய்த் திகழ்ந்த பெருவள்ளல் பாரி, ஓரறிவுயிராகிய முல்லைக் கொடிக்கும் பேரருள் சுரந்தான்; தனது மணித் தேரை அதற்குப் பற்றிப் படரும் கொழுகொம்பாய் நிறுத்திவந்தான். பேகன் என்னும் பெருவள்ளல், தனது மலைச்சாரலில் குளிரால் நடுங்கியொடுங்கி நின்ற தோகைமயிலைக் கண்டு உள்ளம் கனிந்தான்; தான் போர்த்திருந்த விலை உயர்ந்த பொன் மயமான போர்வையை அம் மயிலுக்குப் போர்த்து அகம் குளிர்ந்தான். தன்னை அடைக்கலம் அடைந்த குறுநடைப் புறவின் உறுதுயர் நீக்கச் சிபி என்னும் செங்கோல் மன்னன், தன் உடம்பையே உவந்து கொடுத்தான். தேவர்கட்குத் தீங்கிழைத்த விருத்திராசுரனை அழித்தொழிக்கத் ததீசி என்னும் தவமுனிவன், அத் தேவர்கள்பால் கொண்ட அன்பால் இந்திரனுக்குத் தனது முதுகெலும்பை ஈந்து உயிர்நீத்தான். இங்ஙனம் அன்புடையார் பலர், பிறர்க்கு என்பும் உரியராய் விளங்கினர்.

கடவுள் அன்பு வடிவானவன். 'அன்பே கடவுள்' என்று ஆன்றோர் இயம்புவர்.

> " அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
> அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார் "

என்பர் திருமூலர். இறைவன் அன்பு என்னும் பிடிக்குள் அகப்படும் மலையாவான். அன்பு என்னும் குடிசையுள் புகுந்து வாழும் அரசனாவான். அன்பு என்னும் வலைக்குள் விழும் பரம்பொருள் ஆவான். அன்பு என்னும் கரத்தில் அமரும் அமுதமாவான். அன்பு என்னும் குடத்துள் அடங்கும் கடலாவான். அன்பு என்னும் உயிரில் ஒளிரும் அறிவாவான். அன்பு என்னும் அணுவுள் அமைந்த பேரொளியாவான். இங்ஙனம் அன்பு வடிவாய் இலங்கும் இறைவன் அன்பால் ஈர்க்கப்படும் திறத்தை இராமலிங்க அடிகளார் இனிது விளக்குவார். ஆதலின், ஈசனுக்கு நேசராக எவ்வுயிர்க்கும் அன்பு செய்தல் வேண்டும் என்பர் ஆன்றோர்.

ஓருயிர், மற்றோர் உயிரிடத்துக் காட்டும் அன்பு, உறவு முறையால் பல திறத்தனவாகும். கணவன் மனைவியிடத்துக் காட்டும் அன்பு, மனைவி கணவனிடத்துக் காட்டும் அன்பு, தந்தை மைந்தனிடத்துக் காட்டும் அன்பு, மைந்தன் தந்தையிடத்துச் செலுத்தும் அன்பு, தாய் சேயிடத்துக் காட்டும் அன்பு, சேய் தாயிடத்துச் செலுத்தும் அன்பு, தமையன் தம்பியிடத்தும், தம்பி தமையனிடத்தும், தமக்கை தங்கையிடத்தும், தங்கை தமக்கையிடத்தும் செலுத்தும் அன்பு எனப் பலவகைப்படும். இவற்றுள் தாய் சேயின்பால் காட்டும் அன்பே தலைசிறந்தது.

அதற்கு இணையாக எவரது அன்பையும் இயம்ப முடியாது.

" பால்நினைந்து ஊட்டும் தாய் "

என்று பாராட்டினார் மாணிக்கவாசகர். இறைவன் உயிர்களிடத்துக் காட்டும் இணையற்ற பேரன்புக்கு உலகில் தாயன்பு ஒன்றைத்தான் உவமையாக உரைக்க முடியும். ஆதலின்; "பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப் பரிந்து இன்னருள் புரிந்தான்" என்று மணிவாசகர் பேசியருளினார். " தாயிற் சிறந்த தயாவான தத்துவனே " என்றும் போற்றுவார்.

இத்தகைய சிறப்புவாய்ந்த அன்பினால்தான் உலகில் அறத்தை ஆற்ற முடியும். செய்யத் தக்கது இன்னதெனை, ஆன்றோரால் வரையறுக்கப் பெற்றதே அறம் எனப்படும். அறுதியிடப் பெற்றது அறமாயிற்று. ஆன்றோரால் செய்யத் தகாதெனை மறுக்கப் பெற்றது மறமாயிற்று. அறம், பொருள், இன்பம் என்ற மூன்றனுள் பொருளும் இன்பமும் இம்மையில் மட்டுமே இன்பம் விளைப்பன. அறமோ எனின். இம்மை மறுமை வீடென்னும் மூன்றையும் ஒருங்கு பயக்கும் பெருங்குணம் உடையது. ஆதலின் வள்ளுவர் பெருமான், பொருள் இன்பங்களைக் காட்டினும் வலியுடைத்து அறம் என்பதை அறிவுறுத்த " அறன் வலியுறுத்தல் " என்றோர் அதிகாரத்தையே வகுத்தருளினார்.

அறத்தின் இலக்கணம் யாது? இதனைத் தெளிவுறச் சொல்ல விரும்பிய வள்ளுவர், தம் ஈரடிப் பாவிலும் ஓரடியாலேயே உறுதிபெற உரைத்தருளினார்.

" மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன். "

இவ் ஓரடியிலேயே அறத்தின் முடிந்த இலக்கணம் வரையறுக்கப் பெற்றுவிட்டது. உள்ளத்தில் கள்ளம் இல்லாதிருத்தலே நல்லறம் ஆகும். "மனத்துக்கண் மாசு" என்று சுருங்கச் சொல்லிய வள்ளுவர், அடுத்த பாவிலேயே அதற்கு விளக்கம் தருகின்றார். அழுக்காறு, அவா, வெகுளி, இன்னுச் சொல் என்ற மாசுகள் மனத்தைவிட்டு அகல வேண்டும். அவற்றைக் கடிந்து நடத்துவதே நல்லறமாகும் என்பர்.

"அழுக்கா(று) அவாவெகுளி இன்னுச்சொல் நான்கும்
இழுக்கா இயன்ற(து) அறம்"

என்பது அவரது வாய்மொழி. இப் பாவில் உள்ள நான்கு மாசுகளை ஏழாகப் பெருக்கிப் பேசும் பேரறிஞரும் உளர். நான்கு என்ற எண்ணை இன்னுச் சொல்லுக்கே உரியதாக்கிப் பொய், குறளை, வன்சொல், பயனில் சொல் என்னும் நால்வகை இன்னுச் சொற்களையும் அகற்ற வேண்டும். பொறுமையும் ஆசையும் கோபமும் ஆகிய குற்றங்கள் போக்கவேண்டும் என்று அவர்கள் பொருள் காண்பர்.

மாசுகள் நீங்கிய மனத்தின்கண் அன்பு நிறைந்து ஆற்றும் அறத்தை இடையறாமல் செல்லும் இடமெல்லாம் செய்தல் வேண்டும். ஒல்லும் வகையான் உவந்து ஆற்றுதல் வேண்டும். இப்போது இளம் பருவத்தை உடையோமாதலின் முதுமையில் செய்வோம் என்று எண்ணுது எப்போதும் இயற்றல் வேண்டும். ஒருவன் வாழ்நாளில் அறம் செய்யாது கழிந்த நாள் ஒன்றேனும் உளதாகாமல் என்றும் நன்றே செய்தல் வேண்டும். அங்ஙனம் செய்த அறம், உயிர் உடலை விட்டு நீங்கும் காலத்துப் பாங்

கான துணையாகப் பற்றிவரும் என்று வள்ளுவர் சொல்லுவார்.

“ பற்றித் தொடர்வன இருவினைப் பாவ புண்ணியமே ”

என்று பட்டினத்தாரும் கட்டுரைத்தனர். அவ் அறமே மீண்டும் பிறவி தோன்றா வண்ணம் தடுக்கும் பெருந்தடை ஆகும் என்று பேசுவார் வள்ளுவர்.

திருக்குறளுக்கு இணையாக வைத்து எண்ணப் படும் நாலடியாரும், நல்லறம் புரியும் நாளைப் பற்றிச் சொல்லுகின்றது. “ மரம் ஒன்றில் கனிகளும் காய் களும் நிறைந்து காணப்படுகின்றன. பெரிய சுழற் காற்று வீசிற்று. அக் காற்றின் ஊற்றத்தால் கனி கள் தாம் உதிரும், காய்கள் உதிரா என்று யாரேனும் கூற இயலுமோ? பிஞ்சுக் காய்களுங்கூட அப் பெருங் காற்றால் வீழ்ந்துவிடலாமன்றோ! அதுபோலத்தான் மக்கள் வாழ்வும் அமையும் என்கிறார் ” ஒரு சமண முனிவர்.

“ முற்றியிருந்த கனியொழியத் தீவளியால்
நற்காய் உதிர்தலும் உண்டு ”

என்பது அம் முனிவர் மொழி. குழந்தை பிறந்த வுடனே இறந்து போதலும் உண்டு. தக்க இளம் பருவத்தில் இறத்தலும் உண்டு. முறையே முதுமை பெருகி மறைதலும் உண்டு. ஆதலின், “ யாம் இளை யம் என்னாது கைத்துண்டாம் போழ்தே கரவாது அறம் செய்ம்மின் ” என்று மக்களை ஏவினர்.

இவ் அறத்தை ஆற்றும் முறைமையை விளக்கப் போந்த முனைப்பாடியார் என்னும் மூதறிஞர், அறத் தைப் பயிர் என்று உருவகப் படுத்தினர். அறக்

கதிர்ப் பைங்கூழைப் பயிரிடும் திறத்தைத் தெளி வுறக் காட்டுகிறார்.

> " இன்சொல் விளைநிலனு ஈதலே வித்தாக
> வன்சொல் களைகட்டு வாய்மை எருவட்டி
> அன்புநீர் பாய்ச்சி அறக்கதிர் ஈன்றதோர்
> பைங்கூழ் சிறுகாலைச் செய் "

என்பது அப்புலவரது அருமைப் பாடல். அறமாகிய கதிரைத் தோற்றும் நறும்பயிர் செழிக்க நன்னில மாய் அமைவது இன்சொல்லே. அவ் இன்சொல் ஆகிய விளைநிலத்தில், ஈதலை வித்தாக விதைத்தல் வேண்டும். இடையே தோன்றும் வன்சொற்களாகிய களைகளைப் பிடுங்க வேண்டும். உண்மை என்னும் உரத்தை இடுதல் வேண்டும். அன்பு என்னும் தண்ணீரைப் பாய்ச்சுதல் வேண்டும். இவ்வாறு ஈதலாகிய விதையை விதைத்துப் பயிர் செய்தால் அறமாகிய கதிரைத் தரும் பெரும்பயிர் அலரியுற்று ஓங்கி வளரும் என்று உரைத்தருளினார் அப் புலவர் பெருமான்.

இங்ஙனம் அறத்தைப் புரிவதால் விளையும் பயன் யாது? இம்மையில் செல்வமும் மறுமையில் வீடுபேறும் இனிது பெறுவர். எடுக்கின்ற பிறவிதோறும் இனிய துணையாகவந்து பயனைத் தந்திடும். இவ்வாறு பயன் தரும் இயல்பை, அளவைகள்கொண்டு நிறுவ வேண்டாம்; கண்களாலேயே நேரில் கண்டுகொள்ள லாம் என்பர் திருவள்ளுவர். பல்லக்கைச் சுமப்பவன், அதில் அமர்ந்து செல்லுபவன் ஆகிய இருவர் நிலைகளி னின்றே அறத்தின் பயனை அறிந்துகொள்ளலாம் என்று சொல்லுவார்.

அறத்தை ஆற்றுதற்குரிய நிலைகளை இரண்டாக வகுத்தார் நம் பொய்யில் புலவர். அவை இல்லறம், துறவறம் என்று சொல்லப்படும். இவற்றுள் இல்லறமே நல்லறம் என்றும் அதுவே முதன்மை வாய்ந்தது என்றும் மொழிந்தருளினர். அறம் என்று சிறப்பித்துச் சொல்லத்தக்கது இல்லறமே என்பதை நன்கு வலியுறுத்துவார். 'அறன் எனப்பட்டது இல்வாழ்க்கையே,' என்று உறுதி தோன்ற உரைப்பார். கருத்தொருமித்த காதல் மனையாளுடன் கனியும் சுவையும் போலக் கூடிக் களிப்புடன் நடத்தும் சிறப்பான இல்லறமே சீரிய நேரிய பேரறமாகும் என்பது தெய்வப் புலவர் திருவுள்ளம்.

## கஎ. விருந்தும் மருந்தும்

‘விருந்தும் மருந்தும் மூன்று நாள்’ என்பது தமிழில் வழங்கும் திருந்திய பழமொழி. தொன்று தொட்டு விருந்தும் மருந்தும் தொடர்புடையனவாகவே விளங்கி வருகின்றன. ‘மருந்தே ஆயினும் விருந்தோடு உண்,’ என்பார் அருந்தமிழ் மூதாட்டியார். தெய்வப் புலவராகிய திருவள்ளுவரும்,

> “விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
> மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.”

என்று விருந்தையும் மருந்தையும் பொருந்தவே தெரிந்து கூறினார்.

விருந்து என்னும் சொல் புதுமை என்று பொருள் படும். புதியராய் இல்லம் புகுந்த மக்களே விருந்தினர் என்று போற்றத் தகுவர். இவ் விருந்தினரை உரை யாசிரியராகிய பரிமேலழகர் இருவகைப் படுத்துக் கூறுவார். பண்டறி வுண்மையிற் குறித்து வந் தாரும் அஃதின்மையிற் குறியாது வந்தாரும் எனப் பிரிப்பர். முன்பொருகால் அறிமுகம் ஆனது கருதி வந்தவர், அறிமுகம் இல்லாமலே புதியவராகப் புகுந் தவர் ஆகிய இன்னவரே விருந்தினர் ஆவார்.

இங்ஙனம் புதியராகப் போந்தவரை அன்புடன் வரவேற்றுப் போற்றும் மரபு, பண்டுதொட்டுப் பழந் தமிழ் நாட்டிற்கு உண்டு. இல்லறம் பேணும் நல்லியல்பு உடையார், முதற்கண் போற்றவேண்டிய அறம், விருந்தோம்பலே. ஆதலின், வள்ளுவர் பெருமான்

இல்லறவியலில் அன்பினை அடுத்து இவ் அறத்தையே உரைத்தருளினர். இல்லிருந்து பல்பொருளை ஈட்டி வாழ்வதெல்லாம் விருந்தோம்புதற் பொருட்டே என்று தெரிந்துரைத்தார். விருந்தினரைப் பேணுத இழிந்த செயல், செல்வம் இருந்தும் வறுமையென்றே கூறத் தகும். வீட்டிற்கு வந்த விருந்தினர் வெளியே இருக்கத், தான் உள்ளே சென்று தனித்து உண்பது அமிழ்தமேயெனினும், அச் செயல் விரும்பத்தக்கது அன்று என்று விளம்பினர்.

விருந்தோம்பலின் சிறந்த பயனைக் கூறவந்த செந்நாப்போதார், பல பாக்களில் விதந்து ஓதுகின்றார். நாள்தோறும் நல்விருந்து ஊட்டுவான் வாழ்வு வறுமையோ சிறுமையோ அடைவதில்லை. அவனது இல்லத்தே திருமகள் உள்ளம் விரும்பி உறைவாள். அவனது விளைபுலத்திற்கு வித்தும் இடுதல் வேண்டா. அவன் மறுமையில் வானவர் விருந்தினனாய் வளம் பெற வாழ்வான். ஆகவே, விருந்தோம்பலாகிய வேள்வியின் பயன் இவ்வளவு என்று வரையறுத்துக் கூற இயலாது என்பார் தெய்வப் புலவர்.

இவ் அறத்தைப் பேணுவார்க்கு மூன்று பண்புகள் இன்றியமையாது அமைதல் வேண்டும். அவை மலர்ந்த முகம், இன்சொல், நன்றாற்றல் என்பன. இல்லறத்தான் விருந்தினரைச் சேய்மையில் வரக்கண்டால் மலர்ந்த முகம் காட்டி வரவேற்றல் வேண்டும். அது பற்றி நெருங்கியபோழ்து அன்போடு இன்சொல் வழங்குதல் வேண்டும். இவ் இரண்டன் காரணமாக விருந்துண்ண இசைந்தபோழ்து இனிது உபசரித்து நனிசுவை உணவினை ஊட்டுதல் வேண்டும்.

அனிச்சப்பூ மிகவும் மென்மை வாய்ந்தது. அது மோந்து பார்த்த அளவிலே வாடிப்போகும். மலர்ந்த முகத்தைக் காட்டாதொழிந்தால், அவர் வாட்டமுற்று வந்த வழியே திரும்புவர். ஆதலின், அனிச்சப் பூவி னும் விருந்தினர் மெல்லியர் என்று வள்ளுவர் சொல்லுவார்.

> " மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
> நோக்கக் குழையும் விருந்து."

என்பது அவரது பொய்யாமொழி.

செந்தமிழ் நாட்டினர் விருந்தினரைச் சிறந்த முறையில் பேணுவர். பெண்களே இச் செயலில் பெருத்த கவனத்தைச் செலுத்துவர். வீட்டில் ஆடவர் இல்லாத வேளையில் விருந்தினர் எவரேனும் வருவ ராயின் பெண்டிர், தம் பிள்ளைகளைக்கொண்டு வர வேற்று உபசரித்து அனுப்புவர். இச்செய்தியைச் சிறுபாணாற்றுப்படை, மலைபடுகடாம் போன்ற பழந் தமிழ் நூல்களில் காணலாம்.

கற்பரசியாகிய கண்ணகி, தன் கணவனைப் பிரிந்து வாழ்ந்த நாளில் தனக்கு ஏற்பட்ட குறைக ளாகச் சில செய்திகளைக் குறிப்பிடுகின்றாள்.

> " அறவோர்க்கு அளித்தலும் அந்தணர் ஓம்பலும்
> துறவோர்க்கு எதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
> விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை."

என்று கண்ணகி கோவலன்பால் கவன்று கூறு கின்றாள். அறவோரையும் துறவோரையும் அந்தண ரையும் விருந்தினரையும் போற்றாத குறையே பெருங் குறையென அவள் வருந்திப் பேசினாள். விருந்து போற்றும் சிறந்த அறம் பழந்தமிழ் முன்னோரால்

பெரிதும் பாராட்டப்பெற்றது என்பதைத், "தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடல்," என்ற தொடரால் இனிது உணரலாகும்.

இலங்கை வேந்தனாகிய இராவணனால் அசோக வனத்தில் சிறை வைக்கப்பெற்ற சீதை, இராம பிரானைப் பலவாறு நினைந்து உள்ளம் வருந்தினாள். அங்ஙனம் வருந்தும் வேளையில்,

"விருந்து கண்டபோது என்னுறு மோவென்று விம்மும்."

எனவும் கவியரசராகிய கம்பர் கட்டுரைத்தார். மேலும் கோசல நாட்டு மகளிர் மாண்பைக் கூறவந்த கம்பர் பெருமான்,

"பெருந்தடங்கண் பிறைநுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க்(கு) ஈதலும் வைகலும்
விருந்து மன்றி விளைவன யாவையே."

என்று பாடியருளினார். கோசல நாட்டுக் கோதையர் செல்வத்தாலும் கல்வியாலும் சிறந்து விளங்கினர். ஆதலின் வருந்தி வந்த வறுமையாளர்க்குப் பொருளை வழங்கினர்; நாள்தோறும் தமது வீட்டை நாடிவந்த விருந்தினரை விரும்பிப் பேணினர்.

கண்ணைப்போல் கணவருடன் ஊடிய காதல் மகளிர், தமது ஊடல்காலத்தில் விருந்தினர் வீட்டை அடைந்துவிட்டால் அதனை மறந்து உபசரிப்பர். ஆடவர், தம் மனைவியர் கோபமாக இருத்தலை அறிந்தால் அதனைத் தணித்தற்கு விருந்தினரை உடன் அழைத்து வருதலும் உண்டு. இதனை, 'விருந்து கண்டு ஒளிக்க ஊடல்,' என்று பழந்தமிழ் நூல்கள் பாராட்டும்.

விருந்தோடு பொருந்த மருந்தை உரைத்த திருவள்ளுவர் அதனைச் சாவா மருந்தெனச் சாற்றினார். தேவாமுதமே சாவா மருந்தெனக் கூறுவர் உரையாசிரியர். உடம்புள் தங்கிய உயிரைக் காத்து ஓம்புதற்கு உற்ற மருந்தாய் உதவுவது உணவே ஆகும்.

"பாரகம் அடங்கலும் பசிப்பிணி அறுகென
ஆதிரை இட்டனள் ஆருயிர் மருந்தென்."

என்று மணிமேகலைக் காப்பியம் இயம்பும். பசிப்பிணி அறுக்கும் அமுத நல்லுணவே ஆருயிர்க்கு மருந்தாய் அமையும். உணவே உயிரைக் காக்கும் ஒப்பற்ற மருந்தாகத் திகழ்வதை அக் காப்பியம் நன்கு வலியுறுத்தும்.

"மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க்(கு) எல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே."

என்று போற்றுவர் சீத்தலைச்சாத்தனார்.

பாண்டிய நாட்டுப் பொதிய மலையில் உயிரை நீடு வாழ்விக்கும் உயர்ந்த மருந்தாகச் சில கனிகள் காணப்பெற்றன. அவற்றுள் பன்னீராண்டுகட்கு ஒருமுறை பழுப்பதாகிய நாவற்கனி ஒன்று. மற்றொன்று அதியமான் பெற்ற அமுத நெல்லிக்கனி. நன்மருந்தாய் அமைந்த நாவற்கனி, தன்னை உண்டவரது பன்னீராண்டுப் பசியை அகற்றவல்லது. பெருங்குலைப் பெண்ணையின் கருங்கனியன்ன பருமன் உடையது. இதனைப்பற்றிய வரலாறு ஒன்று மணிமேகலை நூலுள் பேசப்படுகின்றது.

தமிழ்முனிவன் வாழும் அப் பொதியமலையில் விருச்சிகன் என்றொரு முனிவன் பெருந்தவம் புரிந்தான். பன்னீராண்டுகட்கு ஒருமுறை நெடுந்தவம்

முடிந்து நீள்பசி ஆற்றுவான். அவனது பெரும் பசியை அம் மலைக்கண் பன்னீராண்டுகட்கு ஒருமுறை பழுப்பதாகிய நாவற்கனியே அகற்றி வாழ்விக்கும். ஒருகால் தனது நெடுந்தவம் நீங்கிய அருந்தவன், அமுத நாவற்கனியைக் கொய்து, தேக்கிலை ஒன்றில் பொதிந்து, காட்டாற்றின் கரைமீது அதனை வைத்து நீராடப் போந்தான். அவ்வழியே வந்த கந்தருவ நாட்டுப் புதுமணமகளாகிய காயசண்டிகை என்பாள், அக்கனியைக் காலால் மிதித்துச் சிதைத்துவிட்டாள். அவளது செயலைக்கண்ட அருந்தவன் பெருஞ் சினங்கொண்டான். பருங்கனி சிதைத்த பாவையைப் பன்னீராண்டு தன்னைப்போல் பெரும்பசியால் நலிந்து உழலுமாறு சபித்தான். அச் சாபத்தின் வலிமையால் காயசண்டிகை பன்னீராண்டுகள் இன்னலுற்று வருந்தினாள். பின்னர், மணிமேகலை அமுத சுரபியினின்று எடுத்து வழங்கிய இன்னமுதை உண்டு, பசி ஒழிந்தாள் என்று மணிமேகலைக் காப்பியம் இயம்பும்.

அரும்பசி அகற்றும் அமுத நாவற்கனியைப் போன்றே, பல்லாண்டு வாழ்விக்கும் அமுத நெல்லிக் கனி ஒன்று அப் பொதியமலைக்கண் விளங்கிற்று. மலையில் வாழும் புளிஞரும் எளிதில் நெருங்க முடியாத மலையுச்சியில் பெரும்பாறைப் பிளவினில் அவ் அமுதக் கனியைத்தரும் நெல்லிமரம் நின்று வளர்ந் திருந்தது. அதன் பேராற்றலைத் தவமுனிவர் வாயிலாக, வள்ளல் அதியமான் அறிந்தான். அக்கனியைக் கொய்துவர ஆட்களை ஏவினான். அவரது பெரிய முயற்சியின் பயனாக அரிய கனியைப் பெற்றான். அந்தக் கனியைத் தனது அங்கையில் வைத்து அதன் அருமையை நோக்கிக்கொண்டிருந்தான். இந்த வேளை

யில் செந்தமிழ் மூதாட்டியாராகிய ஔவையார், அதிய மானைக் காண வந்தார். தனது அரண்மனைக்கு விருந் தினராக எழுந்தருளிய தமிழ்மூதாட்டியாரைத் தக்க முறையில் போற்ற, மிக்க ஆவல்கொண்டான் அதிய மான். தான் அரிதாக முயன்றுபெற்ற அமுத நெல் லிக்கனியை அவருக்கே அளித்து உண்பிக்க விழைந் தான். 'தமிழன்னையே! இக் கனியை உண்டருள்க,' என்று அம் மூதாட்டியாரின் கையில் அன்புடன் வழங்கினான்.

அமுதக்கனியினை உட்கொண்ட ஔவையார், அதனது அருஞ்சுவையைக் கண்டு வியந்தார்; மகிழ்ந் தார். 'இஃதென்ன! இந் நெல்லிக்கனி சாதாரணக் கனியன்றே? தெவிட்டாத தெள்ளமுதத் தீங்கனி யாக அன்றோ இருக்கின்றது! இதன் வரலாறு என்ன?' என்று பரபரப்புடன் வள்ளலை வினவினார். அதியமான், அக்கனியின் பெருமையையும் வந்த வர லாற்றையும் தெளிவுற உரைத்தான். அருமருந் தன்ன அமுத நெல்லிக்கனியை அளித்து விருந்து போற்றிய அவனது பெருந்தகைமையை நினைந்து நினைந்து உள்ளம் கசிந்தார். அவனது அருங் குணத்தை அகமகிழ்ந்து வாயாரப் புகழ்ந்தார்:

"போரடு திருவிற் பொலந்தார் அஞ்சி
பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி
நீல மணிமிடற்(று) ஒருவன் போல
மன்னுக பெரும, நீயே தொன்னிலைப்
பெருமலை விடரகத்(து) அருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது
ஆதல் நின்னகத்(து) அடக்கிச்
சாதல் நீங்க எமக்கீத் தனையே."

## எ. சொல்லும் செயலும்

மக்கள் உள்ளத்தே உருவாகும் எண்ணங்கள் சொற்களாக வெளிப்படுகின்றன. உறுதியான எண்ணங்கள் செயல்களாக உருவடைகின்றன. உள்ளத் தூய்மையை உண்மை என்பர். வாயால் சொல்லும் சொற்களின் தூய்மையை வாய்மை என்பர். மெய்யால் செய்யும் செயல்களின் தூய்மையை மெய்ம்மை என்பர். இங்ஙனம் உண்மை, வாய்மை, மெய்ம்மை என வழங்கும் மூன்று சொற்களும் சான்றோரின் ஆன்றமைந்த அரிய பண்புகளை விளக்குவனவாகும்.

வடமொழியில் வழங்கும் சத்தியம் என்ற சொல்லைத் தமிழர் மூன்று சொற்களால் குறித்ததன் கருத்து உய்த்து உணரற்பாலது. மனம், மொழி, மெய் ஆகிய மூன்று கருவிகளும் ஒற்றுமைப்பட்டுப் புரியும் செயலே வெற்றிபெறும் என்பதை அச் சொற்கள் விளக்கி நின்றன.

> "சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
> சொல்லிய வண்ணம் செயல்."

என்று வள்ளுவர் சொல்லுவார். வாய்ச்சொல்லில் வீரர் ஆகிய சிலர் எதனையும் எளிதாகச் சொல்லிவிடுவர். அதனைச் செயலில் கொண்டு இயலாது திகைப்பர். ஆதலின் சொல்லிய வண்ணமே திண்ணமாகச் செயலைச் செய்து முடிக்கும் உறுதியான எண்ணம் எல்லோருக்கும் வேண்டுவதாகும்.

சொற்கள் இனியன என்றும் இன்னாதன என்றும் இருவகைப்படும். இன்னாச் சொல்லை நாம் காகப்

பகுத்து நவில்வர். பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் என்று அவை பகுக்கப்படும். இந் நான்கு சொற்களும் இன்னல் விளைக்கும் வன்சொற்கள் ஆகும். ஆதலின் இனிய சொற்களையே எவ்விடத்தும் எவரிடத்தும் எப்பொழுதும் பேசுதல் வேண்டும். கையிடத்தே நறுஞ்சுவை நிறைந்த கனிகள் இருக்கவும் சுவையற்ற காய்களை உண்பானேன் என்னென்பது? உள்ளத்தே இன்சொற்களும் உள்ளனவாக, அவற்றைச் சொல்லிப் பிறரை மகிழ்விக்காது வன்சொற்களைப் பேசித் துன்பத்தை வரவழைத்துக் கொள்வது முறையாகுமோ?

"இன்சொலால் அன்றி இருநீர் வியனுலகம்
வன்சொலால் என்றும் மகிழாது."

என்று கூறுவார் சிவப்பிரகாசர். திங்களின் தண்ணிய கதிர்களைக் கண்டே கருங்கடல் பொங்கியெழும். கதிரவனின் வெங்கதிரைக் கண்டு அக்கடல் பொங்குவதில்லை. ஆதலின் மென்மதுர வாக்கையே இந்த மேதினி விரும்பி வரவேற்கும்; வன்மொழியைக் கேட்டு மண்ணுலகம் இகழும் என்பர் முன்னோர்.

"பொய் சிதைக்கும் பொன் போலும் மேனியை"

என்பர் புலவர். "பொய் சொன்ன வாய்க்குப் போசனம் இல்லை" என்பது நம் நாட்டுப் பழமொழி. "நெஞ்சாரப் பொய் தன்னைச் சொல்ல வேண்டாம்" என்று நீதி ஓதுவார் நம் தமிழ்ச் சான்றோர். வாயின் இயல்பான தன்மை வாய்மையே. அதற்கு முரணாகப் பொய் மொழிவது எத்துணைப் பொருந்தாத செயல் என்பதை நினைந்து பார்க்க வேண்டும். வாய்மைக்கு இலக்கணம் வகுத்த வள்ளுவர் பெருமான், பிறிதோர்

உயிர்க்குச் சிறிதும் துன்பம் விளையாத சொல்லே வாய்மை என்று கூறுவார். பொய்யும் சில வேளைகளில் புரை தீர்ந்த நன்மையைப் பிறர்க்கு விளக்குமாயின் மெய்யெனப் போற்றலாகும் என்பது வள்ளுவர் உள்ளம்.

> "பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
> நன்மை பயக்கும் எனின்."

என்பது அவரது தெள்ளமுத மொழி.

தீங்கு விளைக்கும் வன்சொற்கள் நான்கனுள் புறங்கூறல் என்பதும் ஒன்று. இதனைப் புறங்கூறாமை என்ற அதிகாரத்தால் வெறுத்துப் பேசுகிறார் தெய்வப் புலவர். பிறரைப்பற்றி அவர் இல்லாதவிடத்து இகழ்ந்து பேசுவதே புறங்கூறல் ஆகும். அதனையே குறளை என்றும் கூறுவர். பிறரைக் காணாதவழி இகழ்ந்துபேசி, அவரைக் கண்டவழி இனியவனைப்போல நடித்து ஒருவன் உயிர் வாழ்தலினும், இறந்தொழிதல் சிறந்த பயனைத் தரும் என்பர் செந்நாப்போதார். ஒருவன் எதிரே நின்று இரக்கமற்ற சொற்களைப் பெருக்கமாகப் பேசினும் பேசுக; அவன் எதிரே இல்லாத வேளையில் அவனைப் பழித்தும் இழித்தும் பேசற்க என்பார். பிறரைப் பற்றிப் புறங்கூற முற்படுவார் அவரிடத்தே உள்ள குற்றங்களை ஆய்ந்து காணுமாறுபோலத் தம்மிடத்தே புறங்கூறலாகிய குற்றம் உள்ளது என்பதை உணர வல்லராயின், அவரது உயிர்க்கு வரும் தீங்கும் உண்டோ? என்று கேட்பார். "தீய புறங்கூற்றின் மூங்கையராய்த் திகழ்வார்க்கு அறங்கூற வேண்டா" என்று ஆன்றோர் அறிவுறுத்துவர்.

இயல்பாகவே கண்ணிமைத்தல் இல்லாத இமையார் ஆகிய தேவர்கள், அங்ஙனம் இமைத்தல் செய்யாமைக்கு அறநெறிச்சார ஆசிரியர் முனைப்பாடியார் காரணம் கற்பிக்கிறார்.

> "முன்னின்று ஒருவன் முகத்திறும் வாயினும்
> கண்ணின்(று) உருகக் கலந்துரைத்துப்—பின்னின்று
> இழித்துரைக்கும் சான்றோரை அஞ்சியே தேவர்
> விழித்திமையார் நின்ற நிலை."

என்பது முனைப்பாடியாரின் திருப்பாடல். உலகில் சிலர், ஒருவன் முன்னால் நிற்கும்போது, கல்லும் கனிந்து உருகுமாறு முகத்தால் மலர்ந்து நோக்கி, வாயால் அவன் புகழினைப் பேசுவர்; அவன் சென்ற பின்னர் அவனை இகழ்ந்து பேசுவர்; இத்தகைய இழிசெயல் உடையார் எத்துணை இழிந்தோர் ஆவர்! அவர்களைச் சான்றோர் என்று இகழ்ச்சிக் குறிப்புத் தோன்ற இயம்புகின்றார். இங்ஙனம் புறங்கூறும் புல்லர்கள், தம்மையும் ஒருகால் இகழ்ந்து பேச முனைந்து விடுவரோ என்று எண்ணிய தேவர்கள் கண்ணிமையாது, அவர்தம் செயலை நோக்குகின்றனர். இங்ஙனம் புலவர் தற்குறிப்பேற்றமாகப் புறங்கூறுவாரை இகழ்ந்து உரைக்கின்றார்.

வன்சொல்லைக் குறிக்கவந்த வள்ளுவர் அடக்கமுடைமையில் நாவடக்கமும் ஒன்றென விளக்குகின்றார். "யாகாவாராயினும் நாகாக்க" என்று அன்பு கனிய நல்லுரை பகர்ந்தார். நாவைக் காவாது விடுத்து, மக்கள் சொற்குற்றப்பட்டுச் சோகாப்பரே என்று இரங்கி இன்னுரை கூறினார். வன்சொல்லின் தீமையை விளக்கப்போந்த வள்ளுவர்,

"தீயினால் சுட்டபுண் உள்ளாறும், ஆறாதே
நாவினால் சுட்ட வடு."

என்று அருளிச் செய்தார். நெருப்பினால் சுட்டபுண் உடம்பில் தழும்பாக விளங்கினும் உள்ளத்தில் உடனே ஆறிவிடும். நாவால் கூறிய கொடுஞ் சொல்லால் ஒருவன் உள்ளத்தே ஏற்பட்ட புண், மாறாத வடுவாக, என்றும் ஆறாத புண்ணாக அவனை அலைத்துச் சிதைத்துவிடும். அங்ஙனம் பிறன் உள்ளத்தைப் பெரிதும் வருத்தும் கடுஞ்சொல்லை ஒருவன் உரைத்தால், அச்சொல் உரைத்தவனையே ஒழியாது வந்து சுடும். ஆதலின் அறிவுடைய நன்மக்கள் எக்காலத்தும் வன்சொல்லை இயம்பார் என்று நாலடி நூல் நவிலும்.

"காவா(து) ஒருவன்தன் வாய்திறந்து சொல்லும்சொல்
ஓவாதே தன்னைச் சுடுதலால்—ஓவாதே
ஆய்ந்தமைந்த கேள்வி அறிவுடையார் எஞ்ஞான்றும்
காய்ந்தமைந்த சொல்லார் கறுத்து."

என்பது முனிவர் மொழி.

கடுஞ்சொல் தோன்றுவதற்குக் காரணம் வெகுளியே. ஆதலின் யார்மாட்டும் வெகுளியை மறத்தல் வேண்டும் என்பார் திருவள்ளுவர். சினத்துக்குச் "சேர்ந்தாரைக் கொல்லி" என்றே மற்றொரு பெயர் வழங்குவாராயின் அச் சினத்தால் விளையும் கேடு பெரிதென்பதை விளக்கவும் வேண்டுமோ? மனத்தில் சினத்திற்கு இடம் கொடுத்துவிட்டால், அம் மனம் முழுவதையும் தனக்கே உரித்தாக்கிக் கொள்ளும் இயல்பை உடையது அச்சினம். ஆங்கிலேயில் உள்ளத்தினின்று எழும் உணர்ச்சியெல்லாம்

கொடுமை நிறைந்த சொற்களாகவே உருவடைந்து வெளிப்படும் என்பதில் என்ன ஐயம்? ஆகவே,

"உள்ளம் கவர்ந்தெழுந்து ஓங்கு சினம்காத்துக்
கொள்ளும் குணமே குணமென்க."

என்பர் நன்னெறி ஆசிரியர்.

பயனில் சொல்லும் பிறர்க்குத் துன்பம் விளைக்கும் வன்சொல் ஆகும். இதனை நம் தெய்வப் புலவர், பயனில சொல்லாமை என்ற பகுதியால் கடியுமாறு வற்புறுத்துகிறார். பலரும் வெறுக்குமாறு பயனற்ற சொற்களைப் பேசுவானை எல்லோரும் பெரிதும் இகழ்வர். பயனற்ற சொற்களைப் பலர்முன்னே பகர்வது, நண்பர்க்கு நயனற்ற செயலைச் செய்தலினும் தீதாகும். பன்முறையும் பயனில் சொற்களைப் பகர்வானை மகன் என்றே மதித்தல் கூடாது. அவனைப் பதர் என்று வெறுத்து ஒதுக்குதல் வேண்டும். ஆதலின், "மக்களே! சொல்லில் பயனுடைய சொல்லுக; பயனிலாச் சொல்லை ஒன்றேனும் சொல்லற்க" என்று வள்ளுவர் வற்புறுத்துவார்.

இங்ஙனம் நால்வகை வன்சொற்களைக் கடிந்து பேசிய கவிஞர்பெருமானாகிய திருவள்ளுவர், எவ்விடத்தும் இன்பத்தைப் பெருக்கும் இன்சொல்லையே பேசுக என்று வேண்டுவார். அதுவே துன்பத்தை மிகுவிக்கும் வறுமையைத் தொலைப்பதாகும். இம்மைக்கும் மறுமைக்கும் இன்பம் தருவதாகும். இன்சொல் கூறுவானது பாவங்கள் குறைந்து தேயும். புண்ணியங்கள் வளர்ந்து பெருகும். இவ்வாறு பன்னலம் விளைக்கும் இன்சொல்லே தனக்கும் இன்பம் தருவதை அறிந்த ஒருவன் என்ன கருதி

வன்சொல்லை வழங்குகின்றனரே? என்று வள்ளுவர் வன்சொல் கூறுவாரை நினைந்து உள்ளம் குழைகின்றார்.

கேட்பவர் உள்ளம் வேட்கை கொள்ளுமாறு இன்சொல் பேசுபவனே சிறந்த சொல்வல்லான் என்பது வள்ளுவர் கருத்து. சொல்லுக்கு இலக்கணம் இயம்பவந்த அப் புலவர்,

"கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல்."

என்று அறுதியிட்டு உரைத்தருளுவார். இப் பாடலுக்குப் பரிமேலழகர் காணும் பொருள் அவர்தம் நுண்மாண் நுழைபுலத்தைப் புலப்படுத்துவதாகும். நட்பாய் ஏற்றுக்கொண்டாரை அந் நட்பினின்று விலகாதவண்ணம் மேலும் நயக்குமாறு செய்யும் நல்லாற்றல் அச் சொல்லுக்கு அமையவேண்டும். பகைமையால் வெறுப்பவரும் அப் பகைமை ஒழிந்து விரும்புமாறு செய்யும் பெருந்தகைமை அதன்பால் அமையவேண்டும். இங்ஙனம் நட்பை உறுதிப்படுத்திப் பகைமையை ஒழிக்கவல்ல சொல்லே பேராற்றல் வாய்ந்த சொல் என்பது உரையாசிரியர் கொள்ளும் உயர்ந்த கருத்தாகும்.

இத்தகைய நாநலம், எல்லோர்க்கும் எளிதில் அமைவதன்று. அரிதாகப் பெற்ற நாவன்மை உடையவனைப் பகைமையால் வெல்வது எவர்க்கும் இயலாது. கேட்பவர் உளம் கொள்ளுமாறு கருத்துக்களை நிரல்படக் கோத்துச் சொல்லும் வன்மை உடையார்க்கு உலகம் விரைந்து ஏவல் கேட்கும். சொல்வன்மை இல்லாதவர் எத்துணை நூல்களைக்

கற்றாலும் பயனில்லை. அவர் இணர் ஊழ்த்தும் நாறாத மலருக்கு ஒப்பாவார்; குடத்துள் வைத்த விளக்கனையார் என்று கூறுவார்.

ஆகவே, ஒருவன் சொல்லக் கருதிய சொல், பயன் விளைப்பதாகவும் இனிமை தழைப்பதாகவும் இருத்தல் வேண்டும். மற்றவர் உள்ளத்தைப் பற்றி ஈர்க்கும் பெற்றியதாக இருக்கவேண்டும். அச்சொல்லை வெல்லும் சொல், வேறொன்று இல்லாத வகையில் ஆய்ந்து சொல்லுதல் வேண்டும். அத்தகைய சொல்லே, தன்னையும் பிறரையும் செயற்படுத்தும் செம்மை வாய்ந்ததாகும்.

“செய்வன திருந்தச் செய்” என்பது ஔவையாரின் அமுதமொழி. அறிவின் துணைகொண்டு அளவற்ற கருத்துக்களைச் சொல்லிவிடலாம். அவைகளைச் செயல்முறையில் கொணர்பவனே சிறந்த அறிவாளன் ஆவான். உடலாற்றல் உளவாற்றல்களின் துணையின்றிச் செயலாற்றல் எவர்க்கும் இயலாது. பெரியார் துணையாற்றலும் செயல் நிறைவேறப் பெருந்துணை செய்யும்.

சொல்லும் செயலும் ஒத்து அமைதல் வேண்டும் என்ற கருத்தாலேயே திருவள்ளுவர், சொல்வன்மை என்ற அதிகாரத்தை அடுத்துச் செயலைப்பற்றி விரிவாகப் பேசத் தொடங்குகிறார். வினைத்தூய்மை, வினைத்திட்பம், வினைசெயல்வகை என்ற மூன்று அதிகாரங்களால் வினைத்திறத்தை விளக்குகின்றார். முதற்கண் செய்யும் வினையின் செம்மையைப் பற்றிப் பேசுகின்றார். “செயற்கரிய செய்வார் பெரியர்,” என்பது தெய்வப்புலவர் திருவுள்ளம். அருமையும்

தூய்மையும் உடைய செயல்களே ஒருவரைப் பெரியவ ராக்கும் இயல்புடையன; பொருளும் அறமும் புகழும் பயப்பன; வினைநலம் வேண்டிய எல்லாம் தரும் என்பர்.

மக்கள் இயற்றும் செயல்களை இருவகையுள் அடக் கலாம். ஒன்று பொருள் கருதியதாகவும் மற்றொன்று புகழ் கருதியதாகவுமே அமையும். இரண்டும் செயல் தூய்மையின் காரணமாக இம்மை மறுமை இன்பங் களைப் பயப்பனவே. ஆதலின் புகழும் அறமும் பய வாத செயல்களை என்றும் ஒழிதல் வேண்டும்; உலகில் பெருமை அடைய விழைவார்க்கு அவை தடையாக அமையும் என்பர். 'இறந்த மூப்பினராய இருமுது குரவரும் கற்புடை மனைவியும் குழவியும் பசியான் வருந்தும் எல்லைக்கண் தீயன பலவும் செய்தாயினும் புறந்தருக,' என்னும் பிற அற நூல்கள். இக்கருத்து நம் தெய்வப்புலவர்க்கு உடன்பாடன்று. ஆதலின் வன்மையாக அதனை மறுத்துப் பேசுகிறார். தன்னைப் பெற்ற அன்னையின் பெரும்பசியைத் தணித்தற் கென்றேனும் அறிஞர் பழிக்கும் வினைகளைச் செய் யாது ஒழிக என்று அறிவுறுத்துகிறார்.

> "ஈன்றாள் பசிகாண்பா னாயினும் செய்யற்க
> சான்றோர் பழிக்கும் வினை."

என்பது அப் புலவரது உறுதிமொழி.

தீய வினைகளைச் செய்து தீராத பழியுடன் பொரு ளைத் தேடிச் செல்வரென வாழ்வதில் என்ன சிறப் புளது? பழி சாராத பண்புடையார் அனுபவிக்கும் வறுமை, அச் செல்வ வாழ்வினும் மிகப் பெருமை யுடையதாகும். ஒருவன் தீயவினைகளைச் செய்து

தேடிய பொருள் அயன்பால் நிலைத்திருப்பதன்று. அது பசிய மட்பாண்டத்துள் நீரைப்பெய்து பாது காத்தற்கு ஒப்பாகும் என்பர். பிறர் வருந்துமாறு ஈட்டிய பெருஞ்செல்வம் இம்மையிலேயே அவ் ஈட்டினோர் இரங்கி வருந்துமாறு அகலும். 'அழக்கொண்ட எல்லாம் அழப்போம்' என்பர் நம் தெய்வப்புலவர்.

புகழ் பயக்கும் தூய வினைகளைப் பொருந்தவும் திருந்தவும் ஆற்றுதற்கு ஏற்ற மனத்திட்பம்வேண்டும். வினைசெய்ய நினைந்தவர் துணிவுடையராயின், 'எண்ணிய எண்ணியாங்கு எய்துவர்,' என்பார். ஒருவன் செய்யும் செயலை முன்னெல்லாம் மறைத்து முடிவின் கண் பிறர்க்குப் புலப்படுமாறு செய்வதே வினை வெற்றிக்கு உற்ற காரணமாகும். உருவத்தால் சிறியராய சிலர் உறுதியான உள்ளத்தால் சிறந்து விளங்குவர். அன்னாரை வடிவின் சிறுமை நோக்கி இகழ்தல் தகாது. அவர்கள் உருளும் பெருந்தேர்க்கு அச்சாணி ஒப்பர். ஆலம் வித்து மீன்முட்டையினும் மிகச் சிறியதே. எனினும் அதனின்று முளைத்துக் கிளைத்துச் செழித்த முழுமரத்தின் பெருநிழல் முடிமன்னர் நால்வகைப் படையுடன் தங்குதற்குத் தகுவதாகும். ஆதலின், 'சிறியோர் எல்லாம் சிறியரும் அல்லர்,' என்பர் அதிவீரராமர்

நுண்ணிய கருமமும் எண்ணித் துணிதல்வேண்டும். துணிந்தபின் எண்ணுவம் என்பது இழுக்கைத் தரும். தெளிந்து செய்யத்துணிந்த வினைக்கண் இறுதி வரை தளர்தலின்றிக் காலத்தைத் தாழ்க்காது கடிது முடித்தல் வேண்டும். உடல் உழைப்பால் மிக்க துன்பம் உறுவதாயினும் அதுநோக்கித் தளர்தல்

தகாது. முடிவில் அடையும் இன்பத்தையே குறிக் கோளாக எண்ணி உறுதியுடன் வினையாற்றுதல் வேண்டும். அத்தகைய செயல் உறுதி இல்லாத சிறியரைப் பெரியர் மதியார்.

சில செயல்களைக் காலம் நீட்டித்தே செய்தல் வேண்டும். சில வினைகளை விரைந்து முடித்தல்வேண்டும். இவ் இருவகை வினைகளையும் வலியாலும் காலத்தாலும் அறிந்து ஆற்றுதல் நலம். பொருள், கருவி, காலம், வினை, இடம் ஆகிய ஐந்தனையும் தெளிவுற ஆராய்ந்து செயலாற்றவேண்டும். வினை முடிதற்கு வேண்டும் முயற்சி, அதற்கு வரும் இடையூறு, அது நீங்கிச் செயல் முடிந்தால் தான் எய்தும் பயன் இவற்றை எல்லாம் சீர்தூக்கிச் செயல்புரிதல்வேண்டும்.

கல் ஒன்றை எறிந்து காய்கள் இரண்டைப் பெறுதலும் உண்டன்றோ! சிலர் தமது செயல் திறமையின் பயனைச், செய்யும் ஒரு செயலாலேயே மற்றொரு செயலும் தானே முடியப்பெறுவர். கம்புக்குக் களைவெட்ட அழைத்துச்சென்ற காரிகையைத் தம்பிக்குப் பெண்டாகக்கொண்டவன் எத்துணைச் செயல் திறனுடையவன்! ஆடு மேய்க்கச்சென்றவன் அண்ணனுக்குப் பெண்ணும் பார்த்துவந்தால், அவன் பெருஞ் செயல் திறன் படைத்தவன் என்று பேசுவர் அன்றோ!

"வினையால் வினையாக்கிக் கோடல் நனைகவுள்
யானையால் யானையாத் தற்று."

என்பது வள்ளுவர் சொல்லமுதம் ஆகும். மதங்கொண்ட யானையினைச் செலுத்தி அன்னது பிறிதுமோர் யானையைப் பிணித்தல்போல்வதாகும் அச்செயல் என்பர். மதங்கொண்ட யானையை அத்தகைய

மற்றொன்றன் மீது செலுத்திய ஒரு செயலால் இரண்டன் மதமும் அடங்குமாறு செய்தல் அருஞ்செயல் அன்றோ!

மேற்கூறியாங்குச் சொல்வல்லமையைச் செயலாற்றும் திறனும் உடையாரே செயற்கரிய செய்யும் பெரியார் ஆவர். அன்னவரையே மண்ணுலகம் செயல் வீரன் என்று சிறப்பிக்கும். சொல் வீரனால் உலகிற்கு விளையும் பயன் குறைவே. செயல் வீரனாலேயே உலகம் சிறப்பும் செழிப்பும் உறுவதாகும்.

## அ. கொடைநலமும் படைவலமும்

ஈகையும் வீரமும் தமிழரின் இணையற்ற பண்புகள் ஆகும். பழந்தமிழ்நாட்டு மன்னர் பலரும் கொடை நலத்திலும் படை வலத்திலும் சிறந்து விளங்கினர். இவ் உண்மையைச் சங்க இலக்கியங்கள் பல பாடல்களில் இனிது விளக்கும். பண்டைப் புலவரெல்லாம் மன்னர் கொடைநலத்தையும் படை வீரத்தையுமே கொண்டாடித் தண்டமிழ்ப்பாக்கள் பாடினர். திருவள்ளுவரும் தம் நூலுள் இத்திறங்களை நயம்பட உரைக்கிறார்.

தமிழ்நாட்டுக் கொடையின் பெருமையைக் குறிக்கத் திருவள்ளுவர் ஈகை, ஒப்புரவறிதல், அருள் முதலாய பல அதிகாரங்களை வகுத்துள்ளார். இல்லறத்தார் இனிது போற்றவேண்டிய அறம் ஈகையே. இவ் ஈகையின் இலக்கணமாக வள்ளுவர், 'வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை,' என்று வரையறுத்துக் கூறினர். வறியர் அல்லாதவர்க்கு ஒரு பொருளைக் கொடுப்பதெல்லாம் குறியெதிர்ப்பை கைம்மாறு கருதலே ஆகும். அளவு குறித்து ஒரு பொருளை மற்றவர்க்குக் கொடுத்து அவ்வளவே மீண்டும் அவர்பால் பெறுவது குறியெதிர்ப்பை ஆகும்; இங்ஙனம் பயனை எதிர்பார்த்துக் கொடுக்கும் கொடை, ஈகையின்பாற் படாது என்பர்.

ஈகை அறத்தின் சிறப்பினை விளக்கப் புகுந்த பொய்யில் புலவராகிய வள்ளுவர்,

> "நல்லாறு எனினும் கொளல்தீது மேலுலகம்
> இல்லெனினும் ஈதலே நன்று."

என்று சொல்லியருளினர். பிறரிடமிருந்து பொருளைப் பெறுதல் பேரறம் ஆகும் என்று சிலர் சொல்லினும் கொள்ளுதல் தீதே, கொடுப்பதுதான் நன்று என்றார். பிறர்க்குக் கொடை வழங்குவதால் பேரின்ப உலகம் சாருதல் சாலாது என்னினும் ஈதலே நல்லது என்பது அப் புலவரது உறுதியான கருத்து.

மாவலி மன்னன் மாயவனாகிய வாமனனுக்கு மூன்றடி மண் வழங்குதற்கு முற்பட்டபோழ்து, வெள்ளி விரைந்து வந்து தடுத்தான். கொடுப்பதைத் தடுப்பது கண்ட மாவலி மன்னன், குருவின்மேல் கொடுஞ் சினம் கொண்டான். அவ் வெள்ளியை அறிவிலி யென இகழ்ந்து பேசினன். "கொடுப்பதைத் தடுக்கும் கொடியவனே! உடுப்பதுவும் உண்பதுவும் இன்றி உலைவாய்!" என்று சபித்தான்.

"வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்
வள்ளிய ராக வழங்குவ தல்லால்
எள்ளுவ என்சில இன்னுயி ரேனும்
கொள்ளுதல் தீது கொடுப்பது நன்றால்."

என்று மாவலியின் வாயிலாகக் கம்பர், இக்கருத்தை நன்கு வலியுறுத்தினர்.

சிறந்த குடியில் பிறந்த வள்ளல்களின் நல்லியல்புகளை எல்லாம் வள்ளுவர் ஒரே குறட்பாவில் திறம்பட நயம்பெறத் தெளிவுறுத்துகின்றார்.

"இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே உள."

என்பது வள்ளுவரின் தெள்ளமுத வாக்கு. இப் பாடலில் நம் தெய்வப்புலவர், பழந்தமிழ் நாட்டில் திகழ்ந்த பல்வேறு திறமுடைய வள்ளல்களையும் படம் பிடித்துக்

காட்டுகிறார். இந்த உண்மையை உயர்ந்த உரையாசிரியராகிய பரிமேலழகர் வாயிலாகத் தெரிந்து மகிழலாம்.

தமிழர், 'இல்லை,' என்ற சொல்லையே இழிந்த சொல்லாகக் கருதினர். இல்லாதவன் என்னும் சொல், இரப்பான் கூறும் இழிசொல்லாகும். அவ் இழிசொல்லை, நல்லகுடிப் பிறந்தார் நல்கூர்ந்தாராயினும் சொல்லுதற்கு மனம் கொள்ளமாட்டார்கள். அதனைத் தம்பால் சொன்னவர்க்கு அன்பால் ஈவர். இங்ஙனம் அன்றி, 'இலன்,' என்ற இழிசொல்லைப் பிறன், தம் பால் சொல்லுதற்குமுன், அவன் அகக் குறிப்பை முகக் குறிப்பால் அறிந்து கொடுக்கும் சிறப்புடையராயும் கொடையாளர் பண்டு விளங்கினர். மேலும் அவ் இழிசொல்லைப் பிறன் ஒருவன்பால் சென்று, அவன் உரையாத வகையில் பெருங்கொடை வழங்கினர் சிலர். யான் இதுபொழுது பொருளுடையேன் அல்லேன் என்று வஞ்சநெஞ்சமுடையார் வழங்கும் இழிமொழியைச் சொல்லாது நல்ல உள்ளத்துடன் இரந்தார்க்கு நல்கினர். இங்ஙனம் பல்வேறு திறத்தினராகிய வள்ளல்களின் உயர்பண்பை எல்லாம், வள்ளுவர் சிறிய குறட்பாவில் செறித்துக் காட்டினார்.

கொடையில் சிறந்தவன் கன்னன் என்று கொண்டாடுவர் பண்டை அறிஞர். பாரதப் போரில் கன்னன் படைக்கலம் தாங்கி, வில்லின் வல்ல விசயனுடன் கடும்போர் புரிந்தான். கன்னன் உடம்பு முழுதும் விசயனது கடுங்கணைகள் தைத்து முள்ளம்பன்றியைப்போல் காட்சி அளித்தான்; அம்பு தைத்த இடமெல்லாம் குருதிவெள்ளம் சொரிய, மெய் தளர்ந்து

தேரின்மேல் சாய்ந்தான்; ஆயினும் அவனது உடம்பைவிட்டு உயிர் அகலவில்லை. அக் கன்னன் பண்ணிய எண்ணரிய புண்ணியங்கள், அவனது உயிரை அகலவொட்டாது காத்து நின்றன. இந்த உண்மையைக் கண்ணன் கண்டான். விசயனைத் தேர் மிசை நிறுத்தித் தவவேதியன் வடிவு தாங்கிக் கன்னனை நண்ணினான்.

கன்னனை அடைந்த கண்ணன், "இமயத்தில் தவம் இயற்றிய ஏழையேன், நின் கொடைத்திறம் அறிந்து இங்கு வந்தடைந்தேன்; இயைந்தவொரு பொருளை இக்கணத்தே ஈவாய்," என்று வேண்டி நின்றான். தவவேதியன் கூறிய மொழிகள், கன்னன் இருசெவிக்கு அமுதென இனித்தன. நன்றென நகைத்தான் நல்லருள் வள்ளலாகிய கன்னன். 'நான் தரத்தக்க பொருளை நவில்க!' என்று இயம்பினான். மாயவன் ஆகிய மாதவன், "நீ இதுகாறும் பண்ணிய புண்ணியம் அனைத்தும் தருக," என்று கூறினான். அதுகேட்ட கன்னன் களிகூர்ந்து,

"ஆவியோ நிலையில் கலங்கிய தியாக்கை
அகத்ததோ புறத்ததோ அறியேன்
பாவியேன் வேண்டும் பொருளெலாம் நயக்கும்
பக்குவம் தன்னில்வந் திலையால்
ஓவிலா தியான்செய் புண்ணியம் அனைத்தும்
உதவினேன் கொள்கநீ உனக்குப்
பூவில்வாழ் அயனும் நிகரலன் என்றால்
புண்ணியம் இதனினும் பெரிதோ!'

என்று கூறித் தான்செய்த புண்ணியம் அனைத்தையும் தவவேதியனுக்குத் தந்தான்.

கன்னனது புண்ணியத்தை அவன்பால் இரந்து பெற்ற கண்ணன், "அதனைத் தாரை வார்த்துத் தருக," என்று வேண்டினன். போர்க்களத்தில் ஆருயிர் ஊசலாடும் வேளையில் தாரை வார்க்க நீருக்கு என்ன செய்வான் கன்னன்? தனது மார்பில் தைத்த பகழியொன்றை விரைந்து பறித்தான். அப் புண்ணிலிருந்து இரத்தமாகிய செந்நீர் பெருகி வழிந்தது. அதனைத் தன் அங்கையால் ஏந்தி, முனிவனது அங்கையில் பெய்து மகிழ்ந்தான். இவ்விடத்தே வில்லிபுத்தூரார் கன்னனது கொடைவீரத்துடன் அவனது படைவீரத்தையும் குறிப்பாகப் போற்றுகிறார்.

"கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்."

என்ற தமிழ் மறவனது வீரத்தைக் கன்னன்பால் கண்டு களிக்கச் செய்கிறார்.

உயிரைக் காத்துநின்ற புண்ணியத்தையும் உவப்புடன் வழங்கிய வள்ளலாகிய கன்னனது பண்ணரிய கொடைத்திறத்தைக் கண்ணன் கண்டு கழிபேருவகை கொண்டான். 'நீ விரும்பிய வரங்களை விளம்புக; உனக்குத் தருவோம்' என்று உரைத்தருளினன்.

"அல்லல்வெவ் வினையால் இன்னம்உற் பவமுண்
டாயினும் ஏழேழு பிறப்பும்
இல்லையென்(று) இரப்போர்க்(கு) இல்லையென் றுரையா
இதயம்நீ அளித்தருள் என்றான்."

'வினைப்பயன் காரணமாக, மீண்டும் யான் உலகில் தோன்றினால், இல்லை என்று சொல்லி இரப்போர்க்கு, யானும் இல்லை என்று சொல்லாத நல்ல உள்ளத்தை நல்கியருள்வாய்,' என்று கண்ணன்பால் கன்னன்

வரம் வேண்டினன். இங்ஙனமாயின் கன்னனது இன்னருட் கொடைத்திறத்தை என்னென்று இயம்புவது!

தமிழகத்தே வாழ்ந்த கடை எழு வள்ளல்கள் கொடையில் சிறந்து விளங்கினர் என்பதைச் சங்க இலக்கியங்கள் நன்கு பறை சாற்றும். குறுநில மன்னர்களாய் வாழ்ந்த அப் பெருவள்ளல்களின் கொடை நலத்தை நடைபயின்ற நற்றமிழ்ப் பாக்களால் பழந் தமிழ்ப் புலவர்கள் பாராட்டினர். பாரியும் பேகனும் பகுத்தறிவற்ற சிற்றுயிர்க்கும் பரிந்தருள் புரிந்தனர். முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும், எல்லை நீர் ஞாலத்து இசைவிளங்க அம் மன்னர்கள் வழங்கி மகிழ்ந்தனர்.

பாரிவள்ளல் தனது பேரருள் கொடைத்திறத்தால் பார்முழுதும் போற்றும் பரந்த புகழை அடைந்தான். குறுநில மன்னன் ஒருவன் பெரும்புகழ் கொண்டு விளங்குவதைக் கண்ட தண்டமிழ் நாட்டு முடிமன்னர் மூவரும் பொறாமை கொண்டனர். அவனது பறம்பு மலையை மூவரும் படையொடு சூழ்ந்து முற்றுகை இட்டனர். பாரியின் ஆருயிர் நண்பராகிய கபிலர் என்னும் கவிஞர் பெருமான், பறம்பினை முற்றிய மூவேந்தர்க்கும் பாரியின் சீரிய வண்மையையும் வன்மையையும் கூறத்தொடங்கினர்.

"நீங்கள் மூவிரும் நீள்படை சூழப் பன்னெடு நாட்கள் பாரியின் பறம்பு மலையை முற்றுகையிட்டாலும் பாரியை வெற்றிகொள்வதோ, பறம்பினைப் பற்றுவதோ நுங்களால் ஆகாது. இத் தண்பறம்பு நன்னாடு முந்நூறு ஊர்களை உடையது. அனைத்தையும் பாரியைப் பாடி வந்த பரிசிலர் பெற்றுக்கொண்டனர்.

இனி, அவனும் யாமுமே இருக்கின்றோம். நீவிரும் அப்பரிசிலர்போலப் பாடியாடி வருவீராயின் எம்மையும் எஞ்சி நிற்கும் பறம்பு மலையையும் பெற்று மகிழலாம்," என்று கபிலர் முடிமன்னர் மூவர்க்கும் மொழிந்தருளினார். கவிஞர் கூறிய இம்மொழிகளில் பாரியின் கொடைநலமும் படைவலமும் ஒருங்கு விளங்கக் காணலாம்.

"என்றும் முகமன் இயம்பா தவர்கண்ணும்
சென்று பொருள்கொடுப்பர் தீதற்றோர்."

என்பர் சிவப்பிரகாசர். ஒப்புரவு செய்யும் உயர்ந்த உள்ளமுடையார் பிறர்க்கு உதவுவதைத் தமது கடப்பாடு என்று கருதினர். அவர்கள் கைம்மாறு கருதிப் பிறர்க்கு உதவுபவர் அல்லர். மாநிலத்து உயிர்கட்கு மழைவளம் சுரக்கும் மேகம் அவ்வுயிர்கள்பால் எந்தப் பயனையும் எதிர்நோக்குவது இல்லை.

"கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்(டு)
என்னாற்றும் கொல்லோ உலகு."

என்பது வள்ளுவர் தெள்ளுமுத வாக்கு. பாரியின் கொடை நலத்தைப் பாராட்டிய பாவலர் கபிலர் பெருமானும், அப் பாரியை மாரிக்கு ஒப்பிட்டு உரைப்பார். "நாட்டில் உள்ள புலவர் பலரும், 'பாரி, பாரி' என்று அவன் ஒருவனையே பாராட்டுகின்றனர். இவ்வுலகத்து உயிர்களைப் புரத்தற்குப் பாரி ஒருவனே அன்றி மாரியும் உண்டே!" என்று வஞ்சப் புகழ்ச்சியாகப் பழிப்பதுபோலப் பாராட்டினார்.

'செல்வத்துப் பயனே ஈதல், துய்ப்பேம் எனினே தப்புந பலவே,' என்பர் சங்கச் சான்றோர். பாடுபட்டுத் தேடிய பணத்தைத் தாமும் துய்க்காது மற்றவர்க்கும்

வழங்காது மண்ணுள் புதைத்துவைக்கும் மாந்தரைக் 'கேடுகெட்ட மானிடரே!' என்று பழித்துரைப்பார் ஔவையார். 'தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்தற்கே,' என்று வள்ளுவர் வலியுறுத்துவார். முன்னை நல்வினையால் பொன்னும் மணியும் பொருளும் மருவிய பெருஞ்செல்வர்கள், ஊருணியன்ன உலகவாம் பேரறிவாளராக ஒளிர வேண்டும். உள்ளூர்ப் பழுத்த பயன்மரம்போல நயனுடையாளராகத் திகழவேண்டும். மருந்தாகித் தப்பாத மரம்போலப் பெருந்தகையாளராக விளங்க வேண்டும். ஊருணியும், பயன்மரமும், மருந்து மரமும் உயர்ந்த உள்ளம் படைத்த செல்வர்க்கு உவமைகளாக வள்ளுவரால் ஓதப்படுகின்றன.

ஊருணி நீர், ஊரிலுள்ள மக்களுக்கெல்லாம் பயன்படும். புல் பூண்டு முதலாய ஓரறிவுயிருக்கும் அந்நீர் உதவுவதாகும். ஆயினும் அந்நீர், ஊருணியினின்று மக்களாலோ மற்ற உயிர்களாலோ எடுத்துப் பயன்படுத்தப் பெறுதொழிந்தால் ஊருணி அழிந்து போகும். அதுபோலவே ஊருணியன்ன செல்வர்கள், தம் செல்வத்தை மற்றவர்க்கு வழங்குவது தம் செல்வம் பெருகவேண்டும் என்று எண்ணும் தன்னலவுணர்ச்சியாலேயே ஆகும்.

நடுவூர்ப் பழுத்த நன்மரம், நன் கனிகளை உதிர்த்தேயாகவேண்டும். பாழாய்ப்போவது பசுவயிற்றிலே போனால் நலந்தானே! வீணே நிலத்தில் வீழ்ந்த கனிகள், உண்பவர் கையில் தடையின்றிக் கிடைத்தால் உவப்புடன் உண்ணத்தானே செய்வர். இங்ஙனம் பிறர்க்குப் பயன்தரும் நறுங்கனி விளைக்கும்

நன்மரம் போன்ற செல்வர்கள், தமது வளர்ச்சி கருதித் தம் செல்வத்தை மற்றவர்க்கு வழங்குவர். அங்ஙனம் வழங்குங்கால் தம்மால் மற்றவர் பெறும் நலம் தமது புகழ் வளம்பெறுதற்குக் காரணம் என்பதை எண்ணி வழங்குகின்றனர். ஆதலின் இவர்பால் தன்னலத்துடன் பிறர் நலமும் பின்னி நிற்கிறது.

மருந்து மரம், தனது வேரிலிருந்து உச்சி வரையிலுள்ள எல்லா உறுப்புக்களாலும் மற்றவர்க்கு மருந்தாக உதவுகிறது. இலையும் பூவும் காயும் கனியுமாகிய எல்லாம் நல்ல மருந்துகளாகப் பயன்படும் மரங்கள் சில உள. எடுத்துக்காட்டாக வேம்பினைக் குறிக்கலாம். அது வீசும் காற்றும் மாசற்ற மருந்து என்பர் மருத்துவர். அம் மருந்து மரம், தனக்குரிய அனைத்தையும் மற்றவர்க்கு மருந்தாக வழங்கித் தன்னையே மாய்த்துக்கொள்கிறது. "ஐயோ! ஒவ்வொன்றாக நம்பால் உள்ள அனைத்தையும் மக்கள் கவர்ந்து செல்கின்றனரே" என்று கவன்று, தனது பொருளை மற்றவர் கொள்ள மறுப்பதில்லை. தன்னை அடியோடு வெட்டி வீழ்த்தினாலும், தான் தரையில் வீழும் வரையில் வெட்டுவானுக்கும் வெப்பு அகற்றும் தட்பமான நிழலைத் தந்துதவும் மாண்புடையதன்றோ!

"குறைக்கும் தனையும் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாம் கண்டீர் மரம்"

என்பது தமிழ்மூதாட்டியாரின் அமுதமொழி.

இத்தகைய மருந்துமரம் போன்ற பெருந்தகையாளர்கள் பிறர்க்கு உதவுவதே தமது கடமையெனப் பேணி வாழ்வர். "அன்புடையார் பிறர்க்கு என்பும் உரியர்" என்ற வள்ளுவர் வாய்மொழிக்குத் தக்க

சான்றோராகத் திகழ்வர். தன்னலம் என்பது அவர்கள் உள்ளத்தே எள்ளளவும் இருத்தற்கு இடமில்லை. பிறர் நலமே அவர்தம் வாழ்வின் பெருநோக்கமாக விளங்கும். இவர்களே தமக்கென வாழாது பிறர்க்கென வாழும் பெருந்தகையாளர்கள்.

> " உண்டால் அம்ம இவ்வுலகம் ... ...
> தமக்கென முயலா நோன்றாள்
> பிறர்க்கென முயலுநர் உண்மை யானே"

என்று இளம்பெரு வழுதி, அவர்தம் பெருமையை விளக்கினார். பிறர்க்கென முயன்று வாழும் பெருந்தகை மக்களாலேயே இந்தப் பேருலகம் அழியாது நிலவுகிறது என்பது அவ்வழுதியின் கருத்து. இதனை,

> " பண்புடையார்ப் பட்டுண்(டு) உலகம் அதுவின்றேல்
> மண்புக்கு மாய்வது மன் "

என்ற வள்ளுவர் தெள்ளமுத வாக்கும் நன்கு வலியுறுத்தும்.

இங்ஙனம் மற்றவர்க்கு உதவி மகிழ்வதையே வாழ்வின் உயர்ந்த நோக்கமாகக் கொண்டு விளங்கிய தண்டமிழ் நாட்டினர், படைவலியிலும் தலைக்கொண்டு போற்றும் ஆற்றல் பெற்று விளங்கினர். "கூற்றுவனே கொதித்து எழுந்து வந்தாலும் அஞ்சாது கூடி எதிர்க்கும் நெஞ்சுரன் உடையதே படை" என்று படைக்கு இலக்கணம் பகர்வார் வள்ளுவர். பகைவரை வெகுண்டு நோக்கிய கண்கள், பாய்ந்து வரும் வேலைக் கண்டு இமைத்து விடுமாயின் அதுவே தோல்வி என்று கருதும் தோள்வலம் படைத்த வாள் வீரர் வாழ்ந்த நாடு நம் தமிழகம். கையில் தாங்கிய வேலை, எதிர்த்துவந்த களிற்றின்மீது எறிந்துகொன்ற

வீரன், தன்னைநோக்கிப் பிளிறிவரும் மற்றொரு பெருங் களிற்றைத் தாக்குதற்கு வேல் நாடினன். தனது மார்பகத்திலேயே பகைவர் எறிந்த வேல் பதிந்திருப் பது கண்டு, அதனைப் பறித்தெடுத்துச் சிரித்து மகிழ்ந் தான். முகத்திலும் மார்பிலும் பகைவருடைய படை கள் தாக்குண்டு, விழுப்புண் படாத நாளை வீணுளாக எண்ணி வெறுக்கும் வீரர்கள் இங்கு வாழ்ந்தனர். இவ்வாறு தமிழர் படைவீரத்தைப்பற்றி, வள்ளுவர் நம் உள்ளம் துள்ளி எழுமாறு சொல்லுவார்.

பகைவர் நாட்டின்மீது படையெடுத்த கொடை யாளனுகிய சோழன் நலங்கிள்ளி வஞ்சினம் ஒன்று கூறினன்.

> "மெல்ல வந்தென் நல்லடி பொருந்தி
> ஈயென இரக்குவ ராயின், சீருடை
> முரசுகெழு தாயத்து அரசோ தஞ்சம்;
> இன்னுயி ராயினும் கொடுக்குவென்; இந்நிலத்து
> ஆற்ற லுடையோர் ஆற்றல் போற்று(து)என்
> உள்ளம் எள்ளிய மடவோன் தெள்ளிதின்
> துஞ்சுபுலி இடறிய சிதடன் போல
> உய்ந்தனன் பெயர்தலோ அரிதே"

என்று வீரமொழி கூறுகின்றான். பகைவர் எனது அடிபணிந்து 'ஈ' என்று இரப்பாராயின் எனக்குரிய பேரரசைக் கொடுப்பது பெரிதன்று. எனது இன் னுயிரை வேண்டினும் ஈவேன். ஆனால், எனது ஆற் றலையும் உள்ளத் துணிவையும் எள்ளி நகையாடும் இழிஞன், தூங்கும் புலியைக் காலால் இடறிய குருடன் போலப் பிழைத்துப்போதல் அரிது. இங்ஙனம் பேசிய நலங்கிள்ளியின் வஞ்சினத்தில் அவனது கொடைநல மும் படைநலமும் ஒருங்கு விளங்குதலைக் காணலாம்.

## ௧௦. அறிவும் ஒழுக்கமும்

கற்றும் கேட்டும் தெளிந்தும் பழகியும் பெற்ற அறிவே சிறந்த அறிவாகும். "கல்வியின் பயன் அறிவு" என்று கற்றறிந்தோர் கூறுவர். தெய்வப் புலவராய திருவள்ளுவர் அறிவின் இலக்கணத்தைத் திறம்பட இயம்பியுள்ளார். கல்வி கேள்விகளின் நிறைவே அறிவு பெறுதற்கு உறுதுணை என்பதைத் தெரிவுறுத்தக் கல்வி கேள்விப் பகுதிகளை அடுத்து அறிவுடைமை என்னும் அதிகாரத்தை அமைத்துள்ளார். நல்லதன் நலனும் தீயதன் தீமையும் உள்ளவாறு உணர்தலே அறிவாகும் என்று இலக்கண உரையாசிரியர்கள் விளக்குவர். இதனையே நம் தெய்வப் புலவர்,

"சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு"

என்று கூறியருளினர். குதிரையை நிலம் அறிந்து செலுத்தும் பாகுவன் போல வேறுக்கி மனத்தைப் புலமறிந்து செலுத்துவது அறிவு என்று பரிமேலழகர் உரைவிளக்கம் தந்தார். எந்தப் பொருளை எவர், எவர் இயம்பக் கேட்பினும் அப்பொருளின் மெய்யான பயனைக் காணவல்லதே அறிவாகும் என்று மேலும் குறிப்பர். உலகத்தோடு பொருந்த ஒழுகுவதே அறிவாகும். அவ்வாறு ஒழுக அறியாதவர் பல கற்றாராயினும் கல்லாத புல்லரே என்று சொல்லுவார் வள்ளுவர். உலகத்தை ஒருவனுக்கு நட்பாக்குவதும் அந் நட்பின்கண் முன் மலர்தலும் பின் கூம்புதலும்

இன்றி ஒருநிலையனுமாறு செய்வதும் அறிவே. இத்தகைய அறிவு, தன்னை உடையவர்க்கு இறுதி வாராமல் காக்கும் கருவியாகும். பகைவர்க்கும் அழிக்கலாகாத உட்கோட்டையாகும்.

தெளிந்த அறிவினை உடையவர்கள் தாம் சொல்லும் பொருள்கள் அரியனவாயினும் கேட்பார்க்கு எளியனவாய் மனங்கொள்ளுமாறு சொல்லுவார். பிறர்பால் தாம் கேட்பன அறிதற்கரிய நுண்ணியவாயினும் அவற்றைக் கூர்ந்து நோக்கித் தெள்ளிதின் அறிவார். அவர் பின்னே வரக்கடவதனை முன்னே அறியவல்லராயிருப்பர். அஞ்சத்தக்கவற்றிற்கு அஞ்சி ஒழுகுவர். இத்தகையார் நடுங்குமாறு வருந்துன்பம் ஒன்றும் இல்லை என்பர். இவர்கள் அவ்வறிவை அன்றிப் பிறிதொன்றும் இலராயினும் எல்லாம் பெற்றவர் ஆவர். அறிவிலார் எல்லாம் உடையராயினும் ஒன்றும் இல்லாத வறியராவர் என்பர் வள்ளுவர்.

அறிவை உலகறிவு என்றும் மெய்யறிவு என்றும் இருகூறு படுத்துவர் சான்றோர். உலக வாழ்வை நலம்பெற நடத்துவதற்குப் பொருந்துவன புரிவது உலகறிவாகும். உயிர், வீடுபேறெய்திய உயர்நலம் பெறுதற்கு உறுதுணைபுரியும் அறிவே மெய்யறிவு எனலாகும். இதனைத் திருவள்ளுவர் மெய்யுணர்தல் என்ற அதிகாரத்தால் விளக்குவார். எப்பொருள் எத்தன்மைத்தாகத் தோன்றினும் அத்தோன்றிய இயல்பைமட்டும் கண்டொழியாது அப்பொருளின்கண் நின்று மெய்யான பொருளைக் காண்பதே மெய்யறிவாகும் என்பர். மேலும் பிறப்பிற்கு முதற்காரணமாகிய அறியாமை அகல, அரிய வீடுபேற்றிற்குக்

காரணமாகிய செவ்விய பொருளைக் காண்பதே மெய் யுணர்வாகும் என்பர்.

மெய்யறிவுடைய மேலோர் மீண்டும் உலகில் பிறத்தல் இலர். அவர்கட்கு வீட்டின்பம் விளைவது உறுதியாகும். அவர்கள் எய்திநின்ற நிலவுலகத் திலும் எய்தற்கரியதாய வீட்டுலகம் அவர்கட்கு மிகவும் நணித்தாகும். அத்தகைய மெய்யுணர்வை உபதேச வாயிலாகவே ஒருவன் பெறமுடியும். அநுபவமுடைய ஞானதேசிகனைப் பணிந்தே அவன்பால் கேட்டுணர வேண்டும். அங்ஙனம் கேட்ட உபதேச மொழிப் பொருளை அளவைகளாலும் பொருந்தும் ஆற்றாலும் தெளிய ஆராய்தல் வேண்டும். அதனுள் முதற் பொருளை உள்ளவாறு உணர்தல் வேண்டும். அங்ங னம் உணர்ந்தாற்குப் பிறப்பு உளதாகாது என்பர். எல்லாப் பொருட்கும் சார்பாய் உள்ள செம்பொருள் தன்மையை உணர்ந்து இருவகைப் பற்றும் அற் றொழிய ஒழுக வல்லனாயின் அவனைச் சாரநின்ற துன் பங்கள் சேராது அகலும். மெய்ஞ்ஞான முதிர்ச்சி உடையார்க்குக் காமம் வெகுளி மயக்கம் என்னும் குற்றங்கள் அறவே அற்றொழிதலால் அவற்றின் காரியமாகிய வினைப்பயன்கள் விலகுவனவாகும்.

இன்பத்தையும் துன்பத்தையும் ஒன்றெனமதிக் கும் உணர்வுடையாரே மெய்யுணர்வுடையார். அன்ன வரே மெய்ப்பொருளைக் காணும் மேலவர் என்பர் ஆன்றோர்.

> ‘வைததனை இன்சொல்லாக் கொள்வானும் நெய்பெய்த
> சோறென்று கூழை மதிப்பானும்—ஊறிய
> கைப்பதனைக் கட்டியென்று உண்பானும் இம்மூவர்
> மெய்ப்பொருள் கண்டுவாழ் வார்’

என்பது திரிகடுகம். பழித்துப் பேசும் இழிமொழிகளை இனிய வாழ்த்தென எண்ணுவார், பாலும் கட்டிப் பசுநெய் கலந்த சோறென எண்ணி உண்ணுவார், மிகவும் கசப்பான பொருளை இனிப்பான கருப்பங்கட்டி என்று விருப்புடன் உண்ணுவார் ஆகிய இன்னவ ரெல்லாம் மெய்ப்பொருள் காணும் மெய்யுணர்வுடை யார் என்று நல்லாதனார் சொல்லுவார்.

அறிவின் பயனே ஒழுக்கமென ஆன்றோர் உரைப்பர். ஒழுக்கம் என்னும் சொல், தான் ஒழுகுத லும் பிறரை ஒழுகுமாறு செய்தலும் என்ற இரு கருத்தையும் உணர்த்துவதாகும். ஒருவன் தனது அறிவின் முதிர்ச்சியால் ஒழுகலாற்றைப் பிறர்க்கு மட்டும் அறிவுறுத்தலால் பயன் இல்லை. தானும் அவ் வொழுக்க நெறியில்நின்று மற்றவர்க்கு எடுத்துக்காட் டாய் இலங்குதல் வேண்டும். 'ஓதலிற் சிறந்தன்று ஒழுக்கமுடைமை' என்பது முதுமொழிக்காஞ்சி.

"இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல்"

என்பது வள்ளுவர் சொல்லமுதம். ஒழுக்கம் உடைய வர் வாய்ச்சொற்களே வாழ்வில் ஊன்றுகோல்போல உதவுவதாகும். அறிவுடையார் வாய்ச்சொல் என்று வள்ளுவர் குறிக்காததன் கருத்துக் கூர்ந்து நோக்கத் தக்கது. ஒழுக்கம் உடையவர்கள் மறந்தும் தீய சொற் களை உரையார். ஒழுக்கம் இல்லாதவன் அறிவு, உல கிற்குப் பயன்தராது என்பது நம் புலவரின் உறுதி யான கருத்து. ஆதலின், பல்வேறு ஒழுக்கங்களையும் தனித்தனியே வகுத்துப் பேசும் வள்ளுவர், ஒழுக்க முடைமை என்றே ஓர் அதிகாரம் வகுத்தருளினார்.

ஒழுக்கமே ஒருவற்குப் பெருமையும் சிறுமையும் தருவதாகும். ஒழுக்கம் இல்லாதவன் உயர்குடிப் பிறப்பினனாயினும் அச் சிறப்பினை இழப்பான். இழுக்கம் இழிந்த பிறப்பாய்விடும் என்றே குறிப்பார். வேதியன் கற்ற வேதத்தை மறந்தாலும் பின்னும் ஓதி அவ்வறிவைப் பெற்றுக்கொள்ளலாம். அவன் குலவொழுக்கம் குன்றுவானாயின் எல்லா நலங்களும் இழந்தொழிவான். ஆதலின், ஒழுக்கம் உடைமையே உயர்குடிப் பிறப்பாகும். அதுவே எல்லார்க்கும் சிறப்பினைத் தருவது. உயிரினும் மேலாக ஓம்பத்தக்கது என்பர். அறங்கள் பலவற்றையும் ஆராய்ந்து தெளிந்தாலும் இருமைக்கும் துணையாவது இவ் ஒழுக்கமே. இவ் உண்மைகளை அறிந்த சான்றோர் என்றும் ஒழுக்கத்தில் தவறமாட்டார்கள். தவறுவாராயின் அடையத்தகாத பெரும்பழி வந்து சாரப் பெறுவர். அன்னார் மறந்தும் தீய சொற்களை வாயால் கூறார்.

இங்ஙனம் ஒழுக்கத்தைப் பொதுவாகப் பேசிய பெருநாவலர், இன்றியமையாது அமையவேண்டிய சில சிறப்பான ஒழுக்கங்களைக் குறிப்பிடுகிறார். இல்வாழ்க்கை முதலாகப் புகழ் இறுதியாக உள்ள இருபது அதிகாரங்களால் இல்லறத்தார்க்குரிய நல்லொழுக்கங்களை எல்லாம் தெளிவுறப் பேசும் திருவள்ளுவர் ஒழுக்கத்தை நடுநாயகமாக வைத்துப் பின்னும் முன்னுமாக அறவொழுக்கங்களை வலியுறுத்துகிறார். ஆதலின் அன்புடைமை முதலாகப் புகழ் இறுதியாகக் கூறும் எல்லா இயல்புகளும் ஒழுக்கத்தின்பாற் பட்டனவே.

அன்பென்னும் அடிப்படையின்மேல்தான் ஒழுக்கமென்னும் உயர்மாடத்தை அமைக்கமுடியும்.

அன்பு முதிர்ந்துழித் தொடர்பற்ற பிறரையும் விரும்பும் பேரார்வம் பிறக்கும். அவ் ஆர்வமிகுதியால் எத்தகையாரும் இனிய நட்பினர் ஆவர். எவரையும் விருந்தினராக ஏற்றுப் போற்றும் பெருந்தகைமை உளதாகும். எல்லோரிடத்தும் இன்சொல் பேசும் இயல்பு தானே அமையும். பணிந்து நடக்கும் பண்பு பெருகும். செய்ந்நன்றி மறவாத சீரிய திறம் வாய்க்கும்.

வள்ளுவர் செய்ந்நன்றி அறியும் ஒழுக்கினைப் பெரிதும் வற்புறுத்துகிறார். தனக்கு முன் ஓர் உதவி செய்யாதிருக்க ஒருவன் பிறனுக்குச் செய்த உதவியின் சிறப்பு அளப்பரியது. அதற்குக் கைம்மாறாக மண்ணுலகும் விண்ணுலகும் சேர்த்து வழங்கினும் ஒப்பாகாது. ஒருவனுக்கு உயிர்நீங்கும் எல்லைக்கண் செய்த உதவி, அவனது தகுதியை நோக்கச் சிறியதாயினும் அக்காலத்தை நோக்க ஞாலத்தின் மாணப் பெரிதாகும். பயனை எதிர்நோக்காது செய்த உதவியின் உயர்வு கடலினும் பெரிதாகும். இங்ஙனம் உதவியின் மாண்பினைத் தெளிவுற விளக்கினார்.

'உப்பிட்டவரை உள்ளளவும் நினை' என்பது தெள்ளிய பழமொழி. துன்பக்காலத்துப் பற்றுக்கோடாய் நின்று அதனை அகற்றினோரது நட்பை மறத்தலும் துறத்தலும் பொருத்தமற்ற செயலாம். தினைத்துணை நன்றி செய்தாலும் பனைத்துணையாக மதித்தலே அறிஞர் கடனாகும். நல்லோர் தமது அல்லல் அகற்றியார் நட்பை, எழுபிறப்பும் எண்ணிப் போற்றுவர். ஆதலின், நன்றிமறப்பது நன்றன்று என்று கூறுவர். செய்ந்நன்றி மறத்தல் உய்தியில்லாத பெரும்பாவம். பெரிய அறங்களை அழித்தவர்க்கும் கழுவாய் உள

தாகும். நன்றி கொன்ற மகனுக்குக் கழுவாயே இல்லை. அத்துணைப் பெரிய கொடிய பாவம் நன்றி மறத்தல் என்று வள்ளுவர் வன்மையாகக் கூறுவார்.

> 'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
> செய்ந்நன்றி கொன்ற மகற்கு'

என்பது அவர் தம் மறைமொழி.

ஒருவன் செய்த நன்றி ஒன்றனை நினைந்தபோது, அவன் கொன்றாலன்ன இன்னலைப் பின்னொருகால் கொடுப்பினும் அது மறந்துபோம். அந் நன்றி உணர்ச்சி நடுவுநிலைமையினின்று பிறழுமாறு செய்தலும் உண்டு. அவ்வாறு பிறழுதல் கூடாது என்பதை வலியுறுத்தவே செய்ந்நன்றியறிதலை அடுத்து நடுவு நிலைமையை நவில்கின்றார் வள்ளுவர். பகைவர், அயலார், நண்பர் என்னும் முத்திறத்தவரிடத்தும் ஒப்ப நடக்கும் இயல்பே நடுவுநிலைமை எனலாகும்.

> 'சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்
> கோடாமை சான்றோர்க் கணி'

என்பது வள்ளுவர் சொல்லமுதம். முன்னே சமனாக நின்று பின் தன்கண் வைத்த பாரத்தை வரையறுக்கும் இயல்புடையது துலாக்கோல். அதனைப்போன்று காய்தல் உவத்தல் அகற்றி ஒன்றனை ஆய்தலே அறிவுடையார் செயலாகும். அத்தகைய நடுவுநிலைமை சான்றோர்க்கு அணியெனப் போற்றும் ஆற்றல் சான்றது.

சொல்லின்கண் கோடுதல் இல்லாத நல்லியல்பே நடுவுநிலைமையாகும். அவ் வியல்பு, உட்கோட்டம் இன்மையை உறுதியாகப் பெறுவதால் அமைவதாகும் என்பர் திருவள்ளுவர். வாணிகம் செய்வார் எளிதில்

நடுவுநிலைமையினின்று நழுவுதற்குப் பல வாய்ப்புகள் ஏற்படுவது இயல்புபோலும். ஆதலின் இப் பகுதியில் சிறப்பாக வணிகரைக் குறிப்பிடுவது உணரற்பாலது. கொள்வதும் மிகை கொள்ளாமல் கொடுப்பதும் குறை கொடாமல் ஒப்ப நாடிச் செய்யும் திட்பம் வணிகர்க்கு இன்றியமையாத பண்பாகும். செகி நுகத்துப் பகல் போல நடுவுநின்ற நன்னெஞ்சினோராய்ச் செய்யும் வாணிகமே வளர்ச்சியுறும் என்பது வள்ளுவர் உள்ளம். ஆகவே,

“வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோல் செயின்”

என்று சிறந்த வாணிகமுறையை விளக்கியருளினார்.

அடக்கம் ஒழுக்கத்தின் உச்சநிலையாகும். ஆதலின் அடக்கத்தை உறுதிப் பொருளாகக் கொண்டு காத்தல் வேண்டும். உயிர்கட்கு அதனின் மிக்க செல்வம் இல்லை என்று உரைத்தருளினார். மறுமையில் தேவருள் ஒருவனாக வாழ்விக்க அடக்கமே சிறந்த அறமாகும். அறநெறியினின்று பிறழாது அடங்கினவனது உயர்ச்சி மலையினும் மாணப் பெரிதாகும். ஐந்து உறுப்புகளையும் தனது ஓட்டினுள்ளே அடக்கிக் கொள்ளும் ஆமையைப்போல, ஒருவன் ஒரு பிறப்பின்கண் ஐம்பொறிகளையும் நல்வழியில் செலுத்தும் ஆற்றல்மிக்க அடக்கம் உடையவனாதல் வேண்டும். அவ் வன்மை அவனுக்கு எழுபிறப்பிலும் அரணாகும் சிறப்புடையது.

இத்தகைய அடக்கமுடையாரைச் சிலர் அறிவிலர் என்று எண்ணிக் கடக்கக் கருதுவர். அங்ஙனம் கருதினோர் தம் கருத்து நிறைவேறாது வருத்தமுறுவர்.

உறுமீன் வருமளவும் வாடியிருக்கும் கொக்கனையார் அடக்கமுடையார். அதனை அறியாது அவரை எதிர்ப் பார் அழிவது உறுதியாகும். செயலாற்றும் வகையைத் தெரிக்க வந்த வள்ளுவர் அடக்கமுடன் ஆற்றும் செயற்குக் கொக்கின் செயலையே ஒப்பிடுகிறார்.

"கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து."

என்பது அவர்தம் அரியமொழி.

ஒழுக்கத்தை உயிரெனப் பேணும் உயர்ந்தோர் பிறன் மனையாளை விரும்பார். அச்செயல் பெரும் பேதைமையெனக் கருதுவர். தம்மைச் சிறிதும் ஐயுறு தார் மனையாள்பால் தீவினைசெய்து ஒழுகும் தீயர் உயிருடையராயினும் இறந்தவரே. அவர் எத்துணைப் பெருமை உடையாராயினும் அவரது பெருமையால் சிறிதும் பயனில்லை. வானவர் தலைவனாகிய இந்திர னும் இவ் இழிசெயலால் தீராத பழியன்றோ எய்தினன். 'அகல்விசும்புளார் கோமான் இந்திரனே சாலும் கரி' என்று வள்ளுவரும் அவனது இழிசெயலைப் பழித்து நிறுத்தினரன்றோ!

பிறன் மனை விழைவதால் வரும் பெருங்கேட்டை நாலடியார் நன்கு விளக்கும்.

"புக்க இடத் தச்சம் போதரும்போ தச்சம்
துய்க்கும் இடத்தச்சம் தோன்றாமல் காப்பச்சம்
எக்காலும் அச்சம் தருமால் எவன்கொலோ
உட்கான் பிறன்இல் புகல்."

என்பது அந் நாலடியார்ப் பாடல். இங்ஙனம் எக் காலும் அச்சம் விளைக்கும் இழிசெயலைப் புரிவார்க்கு எஞ்ஞான்றும் பழி ஒழியாது நிற்கும் என்பர். பகை

யும் பாவமும் அச்சமும் குடிப்பழியும் என்றும் அவரை விட்டு அகலா. ஆதலின் பிறன் மனையாளை மனத்திலும் கருதாத மாண்பு பேராண்மை என்று போற்றத் தகும். இது சான்றோர்க்கு ஆன்றமைந்த அறமும் அரிய ஒழுக்கமும் ஆகும் என்பர் தெய்வப்புலவர்.

பொறுத்தற்கு அரிய கொடுஞ்செயல் புரிந்தாரையும் பொறுப்பது சிறப்புடை ஒழுக்கமாகும். 'பொறுமை கடலினும் பெரிது' என்பது பொன் போன்ற பழமொழி. நிலம் பொறுமை உடையார்க்கு உவமையாகச் சொல்லப்பெறுவது. தன்னை அகழ்வாரை வீழாமல் தாங்கும் பாங்குடையது நிலமன்றோ! அதுபோலத் தம்மை இகழ்வாரைப் பொறுப்பது தலைசிறந்த அறமாகும். அறிவின்மையால் மிகை செய்த மக்களைப் பொறுத்தல் வல்லமையுள் சிறந்த வல்லமையாக மதிக்கப்படும். பிறர், தமக்குச் செய்த தீங்கைப் பொறுத்தாரை, உயர்ந்தோர் பொன் போல் பொதிந்து போற்றுவர். அதனைப் பொறாது ஒறுத்தாரை ஒரு பொருளாகவே உள்ளத்தில் கொள்ளார். ஒறுத்தார்க்கு உண்டாவது ஒருநாளை இன்பமே. பொறுத்தார்க்கோ உலகம் அழியும் அளவும் அவர் புகழ் நின்று நிலவுவதாகும். அவர்கள் இல்லறத்தவராயினும் துறந்தார்போலத் தூய்மை உடையவர் ஆவர். உண்ணாது நோற்கும் அத் துறந்தாரினும் பொறுமையுடையார் சிறந்தவர் என்பது தெய்வப் புலவர் கருத்து.

மக்களுக்குரிய ஒழுக்க நெறிகளுள் அழுக்காறு கொள்ளாத இயல்பும் ஒன்றாகும். பிறர் ஆக்கம் கண்டவிடத்துப் பொறாமைப்படுதலே அழுக்காறு எனப்

படும். பொறாமை உடையவனிடத்துத் திருமகள் தங்க விரும்பாள். மூத்தவள் தங்க ஏற்ற இடமெனக் காட்டித் தான் அகல்வாள். இதனையே தமிழ் மூதாட்டியார், 'ஔவியம் பேசுதல் ஆக்கத்திற்கு அழிவு' என்று சுருங்க உரைத்தார். இவ் அழுக்காற்றைப் பாவி என்றே பழித்துப் பேசுவார் வள்ளுவர். இப்பாவி, தன்னை உடையானை இம்மையில் செல்வத்தைக் கெடுத்து, மறுமையில் நரகத்துள் செலுத்திவிடும்.

"அழுக்காறு எனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும்."

என்பது வள்ளுவர் வாக்கு.

பிறருடைய பெரும்பொருளைக் கண்டு பொறாமை கொள்ளுதலேயன்றி அதனைக் கவர்ந்துகொள்ளக் கருதுதலும் குற்றம் ஆகும். இதனை வெஃகாமை என்ற அதிகாரத்தால் விளக்குவர். ஒருவன் பிறனுக்குரிய பொருளை அறனின்றிக் கவர்ந்துகொள்ள விரும்புமாயின் அந்நிய நினைவே அவன் குடியைக் கெடுக்கும்; பல குற்றங்களையும் அவனுக்குக் கொடுக்கும். நல்லறிவாளர் வறுமையால் அல்லலுறினும் அவ் வறுமையினை ஒழிக்கப் பிறர் பொருளைக் கவர விரும்பார். அங்ஙனம் விரும்புவாராயின் நூல்கள் பல கற்ற அவர்தம் நுண்ணறிவு என்ன பயனைத்தரும் என்று கேட்பார் வள்ளுவர். பிறன் பொருளை வெளவக் கருதின், அக் கருத்தே ஒருவற்கு உயிர் இறுதியைப் பயக்கும் என்பர். பிறர் பொருளைக் கவர்வதால் வரும் ஆக்கத்தை விரும்பாது ஒழிக என்று வேண்டுவர். ஒருவன் கைப்பொருள் சுருங்காதிருக்கவேண்டின் பிறன் கைப்பொருளைக் கவர விரும்புதலாகாது என்று அறவுரை கூறுவர்.

புறங்கூறுதல் தீய ஒழுக்கங்களுள் ஒன்றாகும். காணாத இடத்துப் பிறரை இகழ்ந்து பேசுதலே புறங் கூறல் எனப்படும். அறம் என்ற சொல்லைக்கூடச் சொல்லாது, பொல்லாத செயல்களை ஒருவன் செய்யு மாயினும் பிறனைப் புறங்கூறான் என்று போற்றப் பட்டால் போதுமானது என்று ஓதுவார் நம் பொய்யில் புலவர். ஒருவனைக் காணாதவழி இகழ்ந்து பேசிக் கண்டவழி அவனோடு பொய்யாக மகிழ்ந்து உரையாடுதல் எண்ணற்ற பாவங்களைப் பண்ணுதலி னும் தீமையாகும். அவ்விதம் புறங்கூறிப் பொய்த்து உயிர் வாழ்வதினும் சாதல் நன்று. புறங்கூறும் பொல் லாத மக்களின் உடற்பாரத்தையும் இந்த உலகம் பொறுக்கின்றது என்ன வியப்பு! என்று புறங்கூற் றின் கொடுமையைத் திறம்பெற விளக்குவார்.

நல்லொழுக்கம் உடையார் பயனற்ற சொற் களைப் பாரித்து உரையார். அங்ஙனம் உரைப்பாரா யின் அவர் நீதியிலர் என்பதை அறியலாம். தீய சொற்களைப் பேசுவதும் தீய செயல்களைப் புரிவதும் ஒழுக்கம் உடையார் ஒருநாளும் இயற்றார். அவற்றைத் தீயினும் கொடிய என்று அஞ்சுவர். தீயாரைக் காண் பதும் தீதெனை அகல்வர். தீயார் சொல்லைக் கேட்க வும் அஞ்சுவர். தீயார் குணங்கள் உரைக்கவும் நாணு வர். தீங்கினர் சேய்மையில் வரக்காணின், கண்ணில் தெரியாத தூரத்தே நீங்குவதே நல்ல நெறியென்று நினைந்து விரைந்து அகல்வர். அன்னார் மறந்தும் பிறன் கேடு சூழார்.

பிறர்க்கு உதவும் அறவுள்ளம் ஒழுக்கத்தின் ஒரு கூறாகும். இதனை ஒப்புரவு என்று குறிப்பர் வள் ளுவர். வானகத்தும் வையகத்தும் ஒப்புரவுபோல

உயர்ந்ததொரு செயல் வேறில்லை. தமது கடமையை உணர்ந்த உயர்ந்தோர் தம் செல்வம் குறைந்த காலத்தும் ஒப்புரவு செய்தற்கு உள்ளம் தளரார். நல்லகுடிப் பிறந்தார் நல்கூர்ந்தாராயினும் இல்லை என்று சொல்ல உள்ளம் நாணுவர். உறுபுனல் தந்து உலகு ஊட்டிய ஆறு, வெள்ளப் பெருக்கற்றுச் செல்லுவார் அடி சுடும் வெப்ப நாளிலும் ஊற்றுப்பெருக்கால் நன்னீரை ஊட்டுமன்றோ! ஆதலின் தம்மால் இயன்றதைப் பிறர்க்கு உதவுதல் ஏற்ற அறமாகும். அங்ஙனம் ஒப்புரவு செய்வதால் பொருட்கேடு வரும் என்று புகன்றாலும் அக்கேட்டை, ஒருவன் தன்னை விற்றாயினும் பெறுதல் தகுதியே என்று அவ் ஒழுக்கத்தை வள்ளுவர் நன்கு வலியுறுத்துவார்.

உலகில் புகழ் நிலவுமாறு வாழ்வதே உயர்ந்த ஒழுக்கமுடையார்க்கு உரிய செயல் ஆகும். புகழ் இல்லாத மக்களின் உடம்பைச் சுமந்த நிலம் விளையுள் குன்றி வளத்தை இழக்கும். புகழைப் பெறுதற்கு ஈதல் அறமே ஏற்ற துணையாகும். இரப்பவர்க்குக் கொடுப்பவரையே புகழ் நாடி வந்தடையும். ஆதலின்,

> "ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
> ஊதியம் இல்லை உயிர்க்கு."

என்று வள்ளுவர் அறிவுரை வழங்குவார்.

கற்றவர்க்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு. அவர் ஒழுக்கமற்றவராயின், அச் சிறப்பை இழப்பது உறுதி. அறிவும் ஒழுக்கமும் ஒருங்கு நிறைந்த சான்றோரையே உலகம் போற்றும். அவர் வாய்ச்சொல்லையே அருண்மொழியாகத் தலைக்கொண்டுபோற்றும்.

## ௯௦. பொருளும் அருளும்

உலகில் மக்கள் எய்தும் உறுதிப் பொருள்கள் மூன்று. அவை அறம், பொருள், இன்பம் என்பன. இம் மூன்றனுள் பொருளே அறத்தைப் புரிதற்கும் இன்பத்தைப் பெறுதற்கும் இன்றியமையாது வேண்டப்படும். 'பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை' என்பது நம் பொய்யில் புலவரது பொன்னுரை மொழி.

"வடுவிலா வையத்து மன்னிய மூன்றின்
நடுவணது எய்த இருதலையும் எய்தும்."

என்று நாலடியார் நவிலும்.

சீரிய வழியில் தேடிய செல்வம் படைத்தோர் சிறந்த அறத்தைச் செய்யலாம். உலகில் நிறைந்த இன்பத்தை அடைந்து மகிழலாம். இவை இரண்டும் அவர்க்கு எளியவாய் அமையும். இதனையே திருவள்ளுவர் பெருமானும்,

"ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்(கு) எண்பொருள்
ஏனை இரண்டும் ஒருங்கு."

என்று வலியுறுத்துவார். அறநெறியால் வரும் பொருளையே ஒண்பொருள் என்று குறிக்கின்றார். அறநெறியில் ஈட்டிய செல்வமே ஒருவற்கு இன்பத்தையும் புகழையும் எய்துவிக்கும். தீய வழியில் தேடிய செல்வம் பழியும் பாவமும் பயந்து வருந்துமாறு செய்யும். ஒருவன் தீய வினைகளைச்செய்து பிறர் வருந்துமாறு பெற்ற பொருள் எல்லாம் இப் பிறப்பிலேயே அவன் வருந்த அகன்று ஒழியும். தூய வழியில் வந்த செல்

வத்தைத் முன் இறந்தானாயினும் அவனுக்குப் பின்னர் வந்து பெரும்பயன் விளைக்கும். "அழக்கொண்ட எல்லாம் அழப் போம்" என்பது வள்ளுவர் சொல் லமுதம். தீய நெறியால் தேடிய செல்வத்தை எத் துணைக் காவல் செய்து பேணினாலும் இருப்பதில்லை. அது பசுமட் கலத்துள் நீரைப் பெய்து காத்த செயலை ஒக்கும் என்பர் திருவள்ளுவர்.

அறநெறியில் ஈட்டிய செல்வமே ஒருவற்கு என் றும் நின்று இருமைக்கும் இன்பம் பயக்கும். ஆதலின் ஒருவன் பிறர்பால் காட்டும் அருளோடும், அவர் தன் பால் செய்யும் அன்போடும் கூடிவரும் செல்வமே சிறந்த செல்வம் என்பர் செந்நாப்போதார். பொருள் ஈட்டுதற்கு உரிய வழிகள் பல உள. உழவுத் தொழி லாலும் பிற கைத்தொழில்களாலும் வாணிகத் தாலும் உத்தியோகத்தாலும் பொருளைத் தேடலாம். ஆயினும் உழவுத் தொழிலால் பெறும் செல்வமே உயர்வுடையதாகும். உழவுக்கு மிகுதியான உடல் உழைப்பு வேண்டும். ஆதலின் அதனால் வரும் மெய் வருத்தம் நோக்கி, மக்கள் பிற தொழில்களைச் செய்து திரிவர். எனினும் இறுதியில் உணவின் பொருட்டு அவ் உழவர்களையே நாடுதல் வேண்டும். இக் கார ணத்தாலேயே "உழந்தும் உழவே தலை" என்பர் தெய்வப் புலவர்.

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர்"

என்று உழவின் உயர்வை அழகுறப் பேசுவார்.

"உழுதுண்டு வாழ்வதற்(கு) ஒப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு"

என்று தமிழ்மூதாட்டியார் வள்ளுவர் கருத்தையே மேலும் வற்புறுத்துவார்.

பொருள் தேடித் திரியும் மக்களைக் குறித்து அத் தமிழ்ச்செல்வியார் இரங்கிக் கூறும் மொழிகள் இதயத்தைத் தொடுவனவாகும். பாழான உடம்பைப் பாதுகாக்க நாள்தோறும் நாழி அரிசி வேண்டுமே! வயிற்றின் கொடுமையால் சேவித்தும் சென்றிரந்தும் தெண்ணீர்க் கடல் கடந்தும் பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும் வாழ்நாளை வீணுகப் போக்குகின்றனரே! என்று அவர் இரங்குவார். ஒருவன் கல்லாதவனுயினும் கைப்பொருளைப் பெற்றவனுயின், அவனை எல்லோரும் சென்று எதிர்கொள்வார்கள். இல்லானை மணந்துகொண்ட இல்லாளும் விரும்புவதில்லை. ஈன்ற தாயும் வேண்டாள். அவன் வாய்ச் சொல்லும் செல்லாது என்று சொல்லுவார். இக் கருத்தையே வள்ளுவர் பெருமானும் மிகச் சுருங்கிய சொற்களால்,

> “ இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
> எல்லாரும் செய்வர் சிறப்பு ”

என்று தெளிவுற விளக்குவார்.

இல்லான் என்ற சொல், பொருள் இல்லாதவன், அறிவில்லாதவன் ஆகியோரைக் குறிக்கும். இல்லாள் என்ற சொல்லோ இல்லிற்கு உரிய நல்லாளை — மனைக்கு உரிய தலைவியாகிய மனைவியை அன்றோ குறிக்கும்? ஒரு பொருளாக மதிக்கப்படாதாரையும் மதிக்கத்தக்காராகச் செய்யவல்லது செல்வமே. அது நந்தா விளக்குப்போல்வது. அதனைப் படைத்தவர்க்குப் பகை என்னும் இருள் மறைந்தொழியும். எல்லோரும் சுற்றமாவார்.

"காலாடு போழ்தில் கழிகிளைஞர் வானத்து
மேலாடு மீனின் பலராவர்"

என்பர் சமண முனிவர்.

உலக வாழ்வுக்கு இன்றியமையாத செல்வம் நிலை பேறு உடையதன்று. நாடக அரங்கில் ஆடும் கூத்தினைக் காண்பதற்கு மக்கட்குழாம் திரண்டு வருவது போன்றே ஒருவற்கு நல்வினை உளதாயின் செல்வம் வந்து சேரும். அவ் ஆகூழ் அவனைவிட்டு அகலுமாயின், அக்கூத்து முடிந்தவழிக் காண்போர்குழாம் விரைந்து நீங்குதல் போல நீங்கிப்போம் என்பர் வள்ளுவர். காலையில் தோன்றி மாலையில் மறையும் கதிரவனைப் போலச் செல்வம் ஒருவற்குத் தோன்றி மறையும் இயல்புடையது. செல்வம் என்று உறுவதற்குச் செல்வம் என்று உரைக்கும் பேர் நன்று என்று நவில்வார் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள்.

பொருட்செல்வமோ எண்ணற்ற பந்தங்களை இயைக்கும்; தெய்வ சிந்தையை நீக்கும்; உறக்கத்தை ஒழிக்கும்; பிறவிக் கடலுள் புகுத்தும். செருக்கு வந்து மூடிக் கொள்ளும். அச் செல்வச் செருக்கினால் வாயுள்ளார் ஊமை ஆவர். செவியுள்ளார் செவிடர் ஆவர். கண்ணுள்ளார் குருடர் ஆவர். இத்தகைய இழிந்த பண்புகளை உண்டுபண்ணுவதால், புலவர்கள் செல்வத்தை வெறுக்கை என்ற பெயரால் குறித்தனர் என்பர் மகாவித்துவான் பிள்ளையவர்கள்.

செல்வத்தின் நிலையாமையை நாலடி நூலும் நன்கு விளக்கும். நூலின் தொடக்கத்திலேயே செல்வ நிலையாமையைத்தான் செப்புகிறது அந்நூல்.

இல்லாள் அண்மையில் அமர்ந்து அறுசுவை உணவை ஊட்ட, மறுசிகை நீக்கி உண்ட செல்வ மக்களும் வறிஞராய்ச் சென்று இரப்பர்.

“அகடுற யார்மாட்டும் நில்லாது செல்வம்
சகடக்கால் போல வரும்.”

வண்டிச் சக்கரத்தைப் போன்று மாறிவரும் இயல்பு உடையது செல்வம். அதனை ஈட்டலும் துன்பம்; காத்தலும் கடுந்துன்பம். அது குறைந்தாலும் மறைந்தாலும் பெருந்துன்பமே. துன்பத்திற்கே உறைவிடம் ஆவது அப்பொருள் என்று கூறுவர்.

ஆற்றில் கார் காலத்தில் வெள்ளம் பெருகி வருமாயின் பள்ளம் மேடாதலும், மேடு பள்ளமாதலும் இயல்பு. அதுபோன்றே செல்வமும் மாறும் இயல்பை உடையது. ஆதலின், மாநிலத்தீர்! ஏழையர்க்குச் சோறிடும்; தண்ணீர் வாரும் என்று தமிழ்ச் செல்வியார் உலகினர்க்கு அறவுரை பகர்ந்தருளினார்.

‘பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை’ என்று சொல்லி அருளிய வள்ளுவர் பெருமானே, “அருள் இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை” என்றும் அருளிச் செய்தார். வீட்டுலகம் அடையும் நாட்டமுடையார் எல்லாரும் ஈட்டிய செல்வத்தில் ஒரு பகுதியை அறத்திற்கு உதவுதல் வேண்டும். பிறர்க்கு உதவி செய்தார் பெருஞ் செல்வம் பிறர்க்கு உதவி ஆக்குபவர் பேறாக மாறும் என்று கூறுவார் சிவப்பிரகாசர். கடலில் நீர் பெருகி இருப்பினும் அது பிறர்க்குப் பயன்படுவதில்லை. புனல் சென்று அந்நீரை முகந்து நன்னீராக்கியே நானில மக்கட்கு மழையாகப் பொழிந்து

உதவுகிறது. அதுபோலவே கயவர் செல்வத்தைத் முரடர் பறித்துப் பலர்க்கும் பகுத்துக் கொடுப்பர்.

அறநூலோர் தொகுத்த நல்லறங்கள் அனைத்துள்ளும் பகுத்துண்ணும் அறமே தலையாயது என்பார் நம் பொய்யில் புலவர். பகுத்துண்டு பழகிய நல்லோனை எந்நாளும் பசிப்பிணி வருத்தாது என்று குறிப்பர். இவ் அறம் செய்ய எண்ணுவான், உள்ளத்தே இன்னருள் நிறைந்தவன் ஆவான். அவ் அருள் ஒருவற்கு எளிதில் அமைவதன்று. இயற்கையில் அமையும் அரிய பண்பு என்பர் ஆன்றோர். "தயையும் கொடையும் பிறவிக் குணம்" என்று பேசுவர். இத்தகைய அருள் அன்பினின்று பிறப்பது. "அருளென்னும் அன்பீன் குழவி" என்பர் வள்ளுவர்.

அன்புத்தாய் ஈன்ற அருங் குழவி ஆகிய அருள், பொருள் என்னும் செவிலியாலேயே இனிது வளர்க்கப் பெறும்.

"அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்
செல்வச் செவிலியால் உண்டு"

என்பது வள்ளுவர் சொல்லமுதம். செவிலி என்பாள் வளர்ப்புத்தாய் ஆவள். பெற்ற தாயை நற்றாய் என்று கூறுவர். அருட்குழந்தையைக் காத்து வளர்க்கும் செவிலியும் செல்வச் செவிலியாக இருக்க வேண்டும் என்பர் நம் வள்ளுவர். அருள் நிறைந்த உள்ளத்தவராக மட்டும் இருந்து யாது பயன்? அதனைச் செயல்முறையில் காட்டுதற்குப் பொருள் அன்றோ வேண்டும். இறக்கும் தறுவாயிலிருந்த கன்னன், 'இல்லை என்று உரைப்போர்க்கு இல்லை

என்று உரையாத இதயம் அளித்தருள்' என்று கண்ணன்பால் வரம் வேண்டினன். கண்ணனோ மைத்துனன் உரைத்த வாய்மை கேட்டு மனமலர் உகந்து இனிதருள் புரிந்தான். அவன், கன்னன் விரும்பிய கனிந்த இதயம் ஒன்றுமட்டும் வழங்கின னில்லை.

"எத்தனை பிறவி எடுக்கினும் அவற்றுள்
ஈகையும் செல்வமும் எய்தி
முத்தியும் பெறுதி முடிவில்என்(று) உரைத்தான்
மூவரும் ஒருவனும் மூர்த்தி"

என்ற வில்லியின் சொல்லில் கண்ணபிரானுடைய கருணை உள்ளம் இனிது விளங்கக் காணலாம். ஈகை உள்ளம் இருந்து பயனில்லை; அவ் அறத்தை ஆற்று தற்குச் செல்வமும் வேண்டும் என்பதை நினைந்தருளிய கண்ணன், கன்னனுக்கு 'ஈகையும் செல்வமும் எய்துக' என்று வரம் அளித்தருளினன்.

'செல்வர்க்கு அழகு செழுங்கிளை தாங்குதல்' என்பர் அதிவீரராமர். தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான் என்ற ஐம்புலத்தையும் செல்வர் ஓம்புதல் வேண்டும். தானும் துய்க்காது பிறர்க்கும் வழங்காது பொருளைப் புதைத்துவைத்து இழக்கும் புல்லர்களை என்னென்று சொல்லுவது! 'கொடுக்கறியாது இறக்கும் குலாமருக்கு என்சொல்லு வேன்' என்று இரங்குவார் பட்டினத்தடிகள். 'பணம் இல்லாதவன் பிணம்' என்பது பழமொழி. பணம் இருந்தும் மணம் பெற மகிழ்ந்து வாழாதவனும் பிண மென்றே பேசுவர் பெருநாவலர். மேலும் ஈயாத உலோபிக்குப் பேய்ப்பிறப்பே உளதாகும் என்பர். பொருளை ஈட்டுதலையே விரும்பி இசை வேண்டாத

மக்களின் தோற்றம், மாநிலத்திற்குப் பெரும் பாரமே யாகும். பல்கோடிச் செல்வம் தேடி அடைந்தாலும் அருளால் பிறர்க்குக் கொடுப்பதும் தாம் துய்ப்பதும் இல்லார் வறியரென்றே அறிஞரால் எண்ணப் பெறுவர்.

பொருளைப் பெரிதும் தேடிய செல்வர்கள் அப் பொருளைக் காத்து வைக்கும் சிறந்த கருவூலம் வறிஞர்கள் வயிறே என்று இயம்புவர் வள்ளுவர். வறிஞரை வாட்டும் பசியை அகற்றுவது சிறந்த அறமாகும். பொருளை உணவாக மாற்றி அவர்தம் வயிறாகிய இருப்புப்பேழையில் சேமித்து வைத்தால் அப் பொருள் இப் பிறவியில் மட்டுமே அல்லாமல் எடுக்கும் பிறவிதோறும் உறுதுணையாய் வந்து உதவும்.

அருள் நிறைந்த செல்வ வள்ளலை நடுவூருள் பழுத்த நன்மரத்திற்கு ஒப்பிட்ட நாயனார், வறியார்க்கு உதவாத செல்வனை நடுவூருள் பழுத்த நச்சு மரத்திற்கு ஒப்பிட்டு உரைப்பார். உண்டவர் உயிரைக் கொண்டு மாய்க்கும் நச்சுப்பழத்தை நல்கும் பெருமரம் ஊரின் நடுவே உயர்ந்தோங்கி வளர்ந்து யாது பயன்? அது கனிகள் பலவற்றைப் பெற்றும் பயன் என்ன? எவரும் அவற்றை விரும்பார்! அருகிலும் செல்லார். அது போலவே உலோபியை எவரும் விரும்பமாட்டார்கள். ஆதலின் பெற்ற பொருளால் அருளைப் பேணி ஆருயிர்க்கு அன்பு செய்தல்வேண்டும். அதுவே அருள் வடிவான பரம்பொருளைக் காணுதற்கும் அவனது அருளைப் பெறுதற்கும் உரிய வழியாகும்.

## ௧௧. ஊக்கமும் ஆக்கமும்

வினை செய்தற்கண் கொள்ளும் உள்ளக் கிளர்ச்சியே ஊக்கம் எனப்படும். ஊக்கமே வாழ்வில் உயர்வைத் தருவது. ஆதலின் 'ஊக்கமது கைவிடேல்' என்று ஓதுவார் தமிழ் மூதாட்டியார். ஊக்கம் உடையவர் எல்லாம் உடையவர் என்றே சொல்லப் பெறுவர். ஊக்கம் இல்லாதவர் என்னுடையரேனும் இலர் என்பர் வள்ளுவர்.

ஊக்கம் உடைமையே ஒருவனுக்கு நிலைபெற்ற செல்வம். பிற செல்வங்களை இழப்பினும் ஊக்கத்தின் உறுதுணையால் அவற்றைப் பெறலாம். ஊக்கம் இல்லாதார் பெற்ற செல்வத்தைக் காக்கும் திறனின்றி இழப்பர். ஊக்கம் உடையார் கைப்பொருளை இழந்தாலும் 'ஐயோ! செல்வத்தை இழந்தோமே' என்று சிந்தை வருந்தார். வினை செய்யுங்கால் விளையும் இடையூறுகள் பலவாயினும் அவை கண்டு மனம் வெதும்பார். சகடம் ஈர்க்கும் பகடுபோல ஊக்கமுடன் செயலாற்ற வல்லாரை வந்துற்ற துன்பமே துன்பப்படும் என்பர் தெய்வப் புலவர்.

அயலூர்க்கு வழி அறியாதார் அறிந்தார்பால் வழி வினவிச்சென்று சேர்வார் அன்றோ! அதுபோல இடர் கண்டு தளராத ஊக்கமுடையான் இருக்கும் இடத்தைத் தேடி, ஆக்கம் தானே அதர் வினுய்ச் செல்லும். தாமரைத் தடாகத்தில் நிறைந்த தண்ணீர் ஆழத்தின் அளவினதாகத் தாமரை மலரது தாளின் நீளமும் அமையும். தடாகத்தில் நீர் பெருகு

மாயின் தாமரை மலர்த்தாளும் அதற்கேற்ப நீளும். நீராழம் குறையுமாயின் அம் மலர்த் தாளும் சுருங்கும். அதுபோலவே மக்கள் மனத்தில் கொள்ளும் ஊக்கத்தின் அளவினதாகவே வாழ்வில் உயர்ச்சி அடைவர்.

> "வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
> உள்ளத் தனைய(து) உயர்வு",

என்பது வள்ளுவர் சொல்லமுதம்.

போர்க்களம் புகுந்த களிறு மிகுதியான அம்புகளால் புண்பட்டாலும் ஊக்கத்தில் தளராது. உயிர் நீங்கும் வரைக்கும் போராடித் தன் பெருமையை நிலை நாட்டும். அதுபோல உறுதியான ஊக்கம் உடையவர்கள் தாம் கருதிய உயர்ச்சிக்குச் சிதைவு ஏற்படினும் சிந்தை தளராமல் தம் பெருமையை நிலைநிறுத்துவர். யானை மற்றைய விலங்கினும் பெரிய உடம்பை உடையது. அதுவன்றிக் கூர்மையான கொம்புகளையும் உடையது. ஆயினும் தன்னைக் காட்டிலும் மிகுதியான ஊக்கமுடைய புலி வந்து தன்னைத் தாக்குமாயின் அதற்கு அஞ்சி ஒடுங்கும். புலியின் மிக்க மெய்வலியும் கருவிச் சிறப்பும் யானைபெற்றிருந்தும் ஊக்கம் இன்மையால் அவ் ஊக்கம் பெரிதுமுடைய புலிக்கு அஞ்சுவதாயிற்று. அதுபோலவே பகைவரின் மிக்க மெய் வலியும் படைவலியும் உடையராயினும் அவர் ஊக்கம் இலராயின், அஃது உடையார்க்கு அஞ்சியழிவர் என்று உவமைத்துணர வைத்தார் வள்ளுவர்.

ஆற்றலையும் ஆக்கத்தையும் பெருக்கும் ஊக்கத்தைப் பெறாதவர், யாம் வள்ளன்மை உடையோம் என்று தம்மைத் தாம் மதிக்கும் மாண்பினைப் பெறார். ஊக்கத்தால் முயற்சியும், முயற்சியால் பொருளும்,

பொருளால் கொடையும், கொடையால் செருக்கும் முறையே உளவாகும். ஊக்கம் இல்லாது ஒழியவே முயற்சியும் பொருளும் கொடையும் செருக்கும் முறையே இலவாயின. ஆதலின் ஒருவற்கு உறுதி யான அறிவென்பது ஊக்க மிகுதியே. அஃது இல்லா தார் மக்களாகார், மரங்களாவார் என்பர் திருவள்ளு வர். கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும் மரங்களோவெனின் காய் கனிகளைத் தரும்; தேவர் உறையும் திருக்கோவில், இல்லம், தேர், மரக்கலம் ஆகியவற்றிற்கு உறுப்பாக அமையும். ஊக்கமற்ற மக்களாய மரங்களோ எதற்கும் பயன்படா.

மக்கள் எண்ணும் எண்ணங்கள் என்றும் உயர்ந் தனவாகவே இருத்தல் வேண்டும். அவற்றை அடை வதையே குறிக்கோளாகக் கொண்டு உழைக்க வேண் டும். ஊழ்வினை காரணமாக எண்ணம் நிறைவேற வில்லையாயினும் அவ் எண்ணத்தை விடுதல் கூடாது.

"உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து"

என்பது வள்ளுவர் சொல்லமுதம்.

ஒருவன் வாழ்வினைக் கெடுப்பன நான்கு தீய பண்புகள். சோம்பல், விரைந்து செய்வதனை நீட்டித் துச் செய்யும் இயல்பு, மறதி, தூக்கம் என்பன அத் தீய பண்புகள். இந் நான்கும் ஊக்கத்தை அறவே ஒழிக்கும் திறமுடையன. 'கெடுநீரார் காமக் கலன்' என்றே இவற்றைக் குறிப்பார் வள்ளுவர். கேடுறுவார் நாடி அணியும் அணிகலன்கள் இத் தீக்குணங்கள். அவர்கள் பிறவிக்கடலுள் ஆழ்ந்து வருந்த விரும்பி யேறும் மரக்கலங்கள் என்றும் உரைக்கலாம்.

மடியே மற்றைய மூன்றற்கும் பிறப்பிடமாய் அமைவது. ஊக்கம் உடையார்க்கும் ஒரு சில சமயங்களில் தாமத குணத்தால் சோம்பல் தோன்றும். அது தோன்றிவிட்டால், அவர் தோன்றிய குடி என்னும் குன்றாத விளக்கும் அணைந்துபோகும். 'மடி என்னும் மாசு ஊர மாய்ந்து கெடும்' என்பார் வள்ளுவர். மடி உடையார் அழிதற்கு முன்னரே, அவர் பிறந்த குடி விரைந்து அழியும். சோம்பல் உடையார்க்கு, நிலம் முழுதாளும் மன்னரது நீள் செல்வம், தாமே வந்து சேர்ந்தாலும் அதன் பயனை அவர்கள் அடையார். அவர்கள் பிறரால் இகழ்ந்து பேசப் பெறுவர். தம் பகைவர்க்கு அடங்கியொழுகும் இழி நிலையை அடைவர். இங்ஙனம் மடியின் தீமையை விளக்கியருளினார் வள்ளுவர்.

இடையே எழும் மடியை ஒழித்து, உள்ளத்தே ஊக்கம் பெருகியவன் உடல் உழைப்பும் உடையவனாதல் வேண்டும். அதனையே வள்ளுவர் ஆள்வினையுடைமை என்று அறிவுறுத்துவார். இடைவிடாத மெய்ம்முயற்சியே ஆள்வினை எனப்படும். தொழிலை ஆளும் தன்மையுடையது அம்முயற்சியாதலின் அதனை ஆள்வினை என்று குறித்தார்.

ஊக்கமும் ஆள்வினையும் ஒருங்குடையான் எத்தகைய அரிய செயலையும் எளிதில் முடிப்பான். அதனை முடித்தற்கு ஏற்ற பெருமையை முயற்சி தருவதாகும். 'முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார்' என்பர். 'முயற்சி திருவினை ஆக்கும்' என்பது முதற்பாவலரின் மொழி. முயற்சி என்னும் உயர்ந்த குணமுடையாரே பிறர்க்கு உதவும் பெருமையினை அடைவர்.

'தாளாளன் என்பான் கடன்படா வாழ்பவன்' என்பார் நல்லாதனார்.

தாளாண்மை என்னும் தனி முயற்சி யில்லாத ஒருவன், எல்லோர்க்கும் உதவும் வள்ளலாக விளங்க வேண்டும் என்று விரும்புவது மடமையாகும். படை கண்டால் அஞ்சும் பேடி, போர்க்களத்தில் வாளேந்தி நின்று யாது பயன்? அவனை எதிர்த்துப் போராடு வாரும் இலராவர். வாளும் அவனது கையில் வாளா இருக்கும். அப் பேடி, வாளைப் பணி கொள்ளும் கருத்துடையனாயினும், அது தன் அச்சத்தால் முடியாத வாறு போல, முயற்சி இல்லாதவன் பலர்க்கும் உதவும் கருத்துடையனாயினும் அது தன் வறுமையால் முடியாது அன்றோ!

விடாமுயற்சி உடையவன் வினை முடித்தலையே விரும்புவான். அவன் தனக்கு இன்பத்தை விரும்பான். அவனது முயற்சிக்குத் திருமகளும் துணையாக நின்று வினைமுடிப்பாள். அவன் தன் உறவினராகிய பாரத்தின் உறுதுயரை நீக்கி அதனைத் தாங்கும் தூண் ஆவான். அவனது செயலைத் துணையாக முன்னின்று முடிக்க இன்னருள் ஈசனே எளிவந்து நிற்பான் என்பர் வள்ளுவர். 'தெய்வம் மடிதற்றுத் தான் முந்துறும்' என்பது அவரது வாக்கு. ஒருவன் முயன்ற வினைக்குத் தெய்வம் துணை நின்றவழி அளவின் மிக்க பயனைத் தரும். முயற்சி ஒன்றே துணையாக வினை செய்வார்க்கு, உடம்பு வருந்திய வருத்தத்தின் அளவு, கூலி வந்து சேரும்.

"தெய்வத்தான் ஆகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்"

என்பது வள்ளுவர் சொல்லமுதம்.

ஊழை, ஆகூழ் என்றும் போகூழ் என்றும் இரு வகையாகப் பகுப்பர். ஆகூழை நல்வினை என்றும் போகூழைத் தீவினை என்றும் புகல்வர். இருவினைகளும் தத்தம் பயனைச் செய்தானைத் துய்க்குமாறு செய்வன. இவற்றை இருள்சேர் இருவினைகள் என்பர் வள்ளுவர். ஊழ்வினையை வெல்லுதல் எவர்க்கும் இயலாது என்பர்.

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்"

என்பது வள்ளுவர் சொல்லமுதம். 'ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும்' என்ற உண்மையை நிலைநாட்டத் தமிழகத்தில் பெருங்காப்பியமே பிறந்தது.

'விதியையும் மதியால் வெல்லலாம்' என்பர் ஆன்றோர். மதியின் துணையால் கொள்ளும் பெருமுயற்சியே ஊழையும் வெற்றிகொள்ளும். மார்க்கண்டன், தனக்கு உரிய பதினாறு ஆண்டு அகவை முடியும் எல்லையில் அதனைக் கடக்க அருந்தவம் கிடந்தான். இறைவன் திருவருட் பேற்றுக்கு இலக்கானான். அவனைக் குறித்த நாளில் குறுகிக் கன்றிய காலனையும் காலாற் கடிந்தான் ஈசன். தன்னை வழிபட்ட அடியார்க்கு இருவினையும் அறுக்கவல்ல பெருமானை, 'ஒன்றி இருந்து நினைமின்கள்! உந்தமக்கு ஊனமில்லை' என்று அருள்மொழி பகர்வார் அப்பர் பெருமான். மார்க்கண்டன், தனது உலையாத முயற்சியால் தலையாய திருவருளைப் பெற்றான். பெருவலி படைத்த ஊழையும் வெற்றிகொள்ளும் பெற்றியுற்றான். அன்னவன் வரலாறு விதியையும் விடாமுயற்சியால் வெல்லலாம் என்பதற்குத் தக்க சான்று என்பர் தமிழ்ப் பெருங்கவிஞராய குமரகுருபரர்.

"உலையா முயற்சி களைகணா ஊழின்
வலிசிந்தும் வன்மையும் உண்டே—உலகறியப்
பான்முளை தின்று மறலி உயிர்குடித்த
கான்முளையே போலும் கரி"

என்பது அவர் அருளிய நீதிநெறி.

ஊழ், ஒருகாலோ இருகாலோ அல்லது விலக்குவது இல்லை. பலகால் முயல்வார் உறுதியாகப் பயன் எய்துவர் என்ற உண்மையை விளக்கவே நம் தெய்வப் புலவரும்,

"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா(து) உஞற்று பவர்"

என்று அருளிச்செய்தார்.

இராபர்ட் புரூஸ் என்னும் மேலைநாட்டு மன்னன், தன் பகைவர் நாட்டின்மீது ஆறுமுறை படையெடுத்தான்; வெற்றி கண்டான் இல்லை. தோல்வி எல்லாம் வெற்றிச் சிகரத்தில் ஏறும் வீரப்படிகள் என்று கொண்டான். ஒருநாள், தான் மறைந்து வாழ்ந்த குகையில் படுத்திருந்த வேளையில், மேலே கட்டிய தனது வலையிலிருந்து தவறி வீழ்ந்த சிலந்தியைக் கூர்ந்து நோக்கினன். அதுவும் ஆறுமுறை முயன்று, தனது கூட்டை அடைய முற்பட்டது. இறுதியில் ஏழாவது முயற்சியில் தனது கூட்டை அடைந்து மகிழ்ந்தது. அதனை நுனித்து நோக்கிய மன்னன் உள்ளத்தே ஊக்கங்கொண்டான். உடனே தனது பெரும்படையைத் திரட்டினன். பகைவர் நாட்டின் மீது படையெடுத்தான். தனது ஏழாவது படையெடுப்பில் இனிய வெற்றியைக் கண்டு வீறு கொண்டான். அவனது ஊக்கமும் முயற்சியும் ஆக்கத்திற்கு அருந்துணை புரிந்தன.

